# தனவைசிய ஊழியன்

# மலர் 1, இதழ் 48

# August 12, 1921

Record no. 148

*Taṉavaiciya ūḻiyaṉ*
*Malar 1, itaḻ 48*
*August 12, 1921*

Record no. 148

௮

சிவமயம்.

தந்திவிலாசம்—"Oolian" Regd No. M. 1509. "Dhana Vysia Oolian"

# தனவைசிய ஊழியன்

வெள்ளி தோறும் வெளிவரும்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ௧. காரைக்குடி துன்மதி௵ ஆடிமீ ௨௮௳ (௧௨—௮—௧௯௨௧) இதழ் ௪௮

## அன்னிய தேயங்கட்குப் பெண்களுடன்போய்வருதல்.

ஆடிமீ ௧௪௳ ஊழியனில் கொழும்பிலிருந்து ராம. இராமநாதன் எழுதிய ஒரு நிருபத்தில் நமது பெண்களை அன்னிய தேயங்கட்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்று எழுதியிருக்கிறார். இது நமது சமூகத்துக்கு அவசியமான ஒரு திருத்தமாகலாம். ஏனெனில், புருஷனும் மனைவியும் வருஷக்கணக்காகப் பிரிந்திருத்தலால் வருங்கேடு கொஞ்சமல்ல. மனைவி மக்களையுத்தேசித்தே பொருளீட்டப்படுகிறது. அம்மனைவி மக்கள் செத்தாலுங் கெட்டாலுங் கூட சமீபத்திலிருந்து பாராத மனைவாழ்க்கை யென்ன பயனுடையது? அன்னிய தேயங்களிற் சென்று நெறிதவறி விபசாரஞ் செய்து கஷ்டமடைகிற கேடு; என்ன! இலேசானதா? நாயகனைப் பிரிந்து தனியே யலைந்து திரிகிறபெண்களின் பரிதாப நிலையென்ன!! இவ்விருதரத்தாரின் வாழ்நாட்களில் எத்தனைகாலம் வீணாகிறது? பிரஜைகளின் விருத்தியில் சமூகத்துக்கு எவ்வளவுபெரியநஷ்டமாகிறது? கண்ணிருந்தும் குருடராவதுபோற் பெண்ணிருந்தும்பிரமசாரியாவது என்ன பரிதாபம்!! ஏன் இதை நமது சமூகம் திருத்திக் கொள்ளக்கூடாது? அன்னிய தேயங்கட்குப்பெண்களுடன் போய் வருதலாற் கேடுண்டென்போர்வாதத்தை நான் பலமுறை சிந்தித்து ஆராய்ந்தேன். அதில் ஒன்றும் அர்த்தமேயில்லை. வீண் பயமேயொழிய வேறே ஒன்றையும் காணவில்லை. ஆகவே முதலிற் கொழும்புக்கும், பின்னர் பர்மா மலேயா நாடுகட்கும் அழைத்துச் செல்ல முந்துங்கள். அதனால் ஒரு குறையும் வராது.

எம். சின்னையா செட்டி.

## தனவைசிய சமூகத்திற்கு ஓர் விஞ்ஞாபனம்.

அமராவதிபுதூர் வயி. நாக. ராம. அ. வேங்கடாசலம்செட்டியாரவர்கள் எழுதுகிறார்கள்:—

கொன்னூற்றூர்க்கூட்டத்தில் பேசிச்செய்திருக்கிற தீர்மானத்தில் ஆனிமீ ௩௨௳-க்கு முன் பெண்ணிற்கு இவ்வளவு தொகை கொடுப்பதென்று பேசி நிச்சயம் பண்ணி முடிவாயிருக்கிற கல்யாணங்களைமட்டும், ஆடிமீ ௧௦-தேதிக்குள் அந்தந்த ஊர் நகரத்தாரிடம் எழுதிவைத்து விட்டால், ௸ கலியாணங்களை தை மாதம் ௨௯-தேதிக்குள் செய்து கொள்ளலாமென்றும், அதுபோல சிறு பையன்களுக்கு பெண் வீட்டார் ஸ்ரீதனம் கொடுப்பதாகப் பேசி உண்டியல் கொடுத்து நிச்சயம் பண்ணி விட்டால், அவர்களும் ஆடிமீ ௧௦-தேதிக்குள் எழுதி வைத்துவிட்டால் சௌகரியமான காலத்தில் கலியாணத்தைச் செய்து கொள்ளலாமென்றும் பேசி முடித்திருக்க, நம்மவரிற் சிலர் சத்தியத்தைக் காப்பாற்ற வேண்டுமென்ற எண்ணத்தை அறவே யொழித்து, நம சமூகத்திற் குரித்தான நன்மையையும் கருதாது நேர்விரோதமாகவும் பொய்யாகவும் ஆனிமீ ௩௨-க்குப் பிறகு புதிதாக பெண்ணிற்கு ஜாஸ்தியான தொகை தருவதாகப் பேசி, அதை ஆனிமீ ௩௨-தேதிக்கு முன் பேசினதாகக் கற்பனை பண்ணி அந்தந்த ஊரில் எழுதிவைக்கப் பிரயத்தனம் பண்ணினதில்; உள்குட்டும் உண்மையும் தெரிந்த வாலிபர் சங்கத்தார் அதிக ஊக்கங்கொண்டு அந்தந்த ஊருக்குப் போய் எவ்வளவு வரையில் நியாயமாகவும் உண்மையாகவும் நன்மையாகவும் பேச வேண்டுமோ அவ்வளவு வரையிற் பேசி, விஷயம் கற்பனைதானென்பதைச் சாதித்து, ஒருவாறு அடங்கியிருப்பதாகவும் இன்னும் இரண்டொருவர் பொய்யை சாதிப்பதிற் பிடிவாதஞ் செலுத்துவதாயும் கேள்விப்படுகிறேன். தனவைசிய ஊழியர் சங்கத்தார் பகீரதப் பிரயத்தனஞ் செய்து, தங்களுடைய குடும்ப காரியங்களையும் பொருள் வருவாயையும் தேக சிரமத்தையுங் கருதாது, அல்லும் பகலும் அரும்பாடுபட்டு சுமார் அறுபது வருஷ காலமாகக் கூடாத நம்முடைய மகாநாட்டைக் கூட்டிவைத்து நம்முடைய சமூகத்துக்கு இன்றியமையாத முக்கிய விஷயங்களைத் தீர்மானத்திற்குக் கொண்டுவந்து அந்த அளவிலும் நின்றுவிடாது, அவ்விதம் நடைபெற வேண்டிய விஷயத்திலும் தங்களுடைய முழுப்பிரயத்தனத்தையும் செலுத்தி இவ்வளவுதூரம் உழைத்துவரும் நன்றியையும் பாராட்டாது, நம் சமூகத்தின் முன்னேற்றத்தையும் கவனியாது, ஏதோ கொஞ்சம் தவறுதலாகப் பொய்யை மெய்யாக சிலா எழுதி வைத்துவிட்ட போதிலும் இப்பொழுது பலரும் உண்மையைக் கண்டுபிடித்து விட்டபடியாலும் மேலசில் தீர்மானத்திற்கு விரோதமான காரியம் நடைபெறாததாலும் பொதுவாக அந்தமுயற்சியை விட்டுவிடவேண்டும். அப்படியல்லாமல் விரோதமாக நடப்பதில் பிடிவாதஞ்செலுத்துதல் முறையுமில்லை. கருத்து நிறைவேறப்போவதுமில்லை. பெருந்திரளான ஜனங்களின் கருத்தும் உண்மையும் எப்பொழுதும் வெற்றியுடன் நிறைவேறும். உண்மைக்கு விரோதமாகசிலர் சுயநலங்கருதி சத்தியந்தவறி பிறர் நிலைமையையும் தங்கள் நிலைமையையும் உணராது அகம்பாவங்கொண்டு செய்யுங் காரியம் பழிபாவத்திற்கும் கேட்டிற்கும் காரணமாக முடியுமேயன்றி ஒரு நன்மையையும் தரமாட்டாது.

ஆனதால் மிகுந்த சிரமத்தோடு முற்றுதலான விஷயத்தை ஊர்ஜிதத்திற்குக் கொண்டுவருவதில் அனைவரும் ஒரே மனதாய் ஊக்கமாக

யாதொரு ஆக்ஷேபமுமின்றி விவாகாதிகளை இந்த ஆவணிமீ முதலே நடத்திவரத்தக்க ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்துவர வேண்டுமாய்ப் பன்முறை மிகவும் தாழ்மையோடு வேண்டிக்கொள்கிறேன்.

கொண்ணூற்றூரார்க் கூட்டத்தில் சிம்மக்கொடி கட்டி வெற்றியோடு காரியமும் பூர்த்தியாகி யிருப்பதால் அங்கே நடந்த தீர்மானப்படி விவாகாதிகளை மேற்கண்ட ஆவணி மாதமாகிய சிம்மமாதத்திலேயே தொடங்கிச் செய்கல் மிகவும் நன்மையையும் வெற்றியையும் தரும். முடிந்திருக்கிற தீர்மானங்களை ஊர்ஜிதத்திற்குக் கொண்டுவருவதில் நம் சமூகத்திற்குப் பல நன்மைகளிருக்கின்றன. பொருட்செலவுகள் குறைகின்றன. விவாகங்கள் மிகுகின்றன. ஒற்றுமை அபிவிருத்தியாகின்றது. இவ்வருஷத்தில் தீர்மானத்திற்குக் கொண்டு வரப்பெற்ற சில முக்கிய விஷயங்களைப் போல வருஷா வருஷம் கூடப்பெறும் மகாநாட்டில் கொஞ்சங் கொஞ்சமாகப் பலவிஷயங்கள் தீர்மானத்திற்கு வரும். அதனாற் பெருங்கீர்த்தியும் பொருள்மிச்சமும் தர்ம அபிவிருத்தியும் குடும்ப விர்த்தியும் ஜாதிக்கட்டுப்பாடும் உயர்ந்த சீர்திருத்தங்களும் உண்டாகும். முக்கியமாகவுள்ள பஞ்சாயத்து விஷயமும் தீர்மானத்திற்கு வரும். அதனாலே நம் சமூகத்திற்கு எல்லையில்லாத நன்மைகளுண்டாகும். இத்தனைக்கும் காரணம் முடிந்த தீர்மானங்களை முன்னுக்குக் கொண்டுவருதலேயாகும். அதனை நகரத்தார் ஒவ்வொருவரும் கவனிக்க வேண்டுமென்றுகேட்டுக் கொள்கிறேன்.

## எனது சிநேகிதர்களுக்கு.

ஆடிமீ உகஉ

நமது ஜாதீய மகாநாட்டின் சம்பந்தமாக அயல்நாட்டிலுள்ள எனது நண்பர்கள் பலர் எனக்குக் கடிதமெழுதியிருக்கிறார்கள். அவரவர்களுக்கு தனித்தனியே லிகிதம் எழுத எனக்கு அவகாசம் இல்லாததற்கு வருந்துகிறேன். அந்த சகோதரர்களுக்கு என்னுடைய சந்தோஷத்தை இதன் மூலம் தெரிவிக்கிறேன். அயல் நாட்டிலுள்ள சகோதரர்களின் மனோசக்தியும் சேர்ந்தே நமது மகாநாடு கூடின தென்பதில் சந்தேகமில்லை. இன்னும் நம் ஜாதிக்கு என்னென்ன உதவி செய்ய இயலுமோ அதில் சிறிதும் பின் வாங்காது மனதாலோ-வாக்காலோ-காயத்தாலோ உழைத்து நமது பெருமையை நிலைநாட்டுவார்களென்று நம்புகின்றேன்.

பிச. சுப்பிரமணியன்
அமராவதிபுதூர்.

## பலவான்குடி.

ஆடிமீ உகஉ

இன்று காலை கூ-மணிக்கு வாலிபர் சங்கம் ஸ்தாபனம் செய்யப்பெற்றது. உகூ-அங்கத்தினர்களுக்கு மேல் சேர்ந்திருக்கிறார்கள். சங்கத்திறப்பு விழாக்கொண்டாட்ட நிமித்தமாக மாலை ரு-மணிக்கு ஸ்ரீமாந் அரு. மு. முத்தையா செட்டியாரவர்கள் வீட்டில் ஒரு கூட்டம் கூட்டப்பெற்றது. ஸ்ரீமாந் பிச சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் அக்கிராசனம் வகிக்க ஸ்ரீமாந்களான ராய சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் 'வாலிபர்கடமை' என்பதைப்பற்றியும், சொ. முருகப்ப செட்டியார் அவர்கள் "எதிர்கால வாழ்க்கை" என்பதைப்பற்றியும் மிக அருமையாக உபந்யசித்தார்கள். அக்ராஸனர் முடிவுரை கூறிய பின்னர் ஸ்ரீமாந் சிவராமன் செட்டியாரவர்கள் வந்தனோபசாரம் கூறினார்கள். சந்தன தாம்பூலம் புஷ்பஹாரம் வழங்கி இரவு கூ-மணிக்கு ஸபை இனிது நிறைவெய்தியது.

## விரையாச்சிலை.
## நகரத்தார் கவனிக்க.

தனவைசிய மகுட மாணிக்கவள்ளல்காள்!

சிற்றூர் முதலாய் மற்ற ஊர்களில் சீர்திருத்தஞ்செய்து அளவுகடவாது நடந்து வருவதை நமது ஊழியன் மூலம் அறிந்திருந்தும் இதுவரை நமதூரில் மேற்கண்ட திருத்தம் செய்யாதிருப்பதன் காரணம் தெரியவில்லை. நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து கொண்டு வரும் அனாவசியமான செலவுகளைக் கூடிய விரைவில் திருத்த, யாவரும் ஒற்றுமையுடன் ஒரே தீர்மானமாய் வரையறைப்படுத்தி முறை தவறாது அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரும்படியாக என் மனமார்ந்த நன்றியைச் செலுத்திப் பன்முறையும் கேட்டுக் கொள்கிறேன். இருவர் மூவர் இவ்விஷயத்தில் அபிப்பிராய பேதமுடையவர்களா யிருப்பினும் அவற்றை யறவே அகற்றிப் பொது நலத்தைக் கருதுவார்களென்று நம்புகிறேன்,

நா. அ. மு. சொக்கலிங்கம்.

## வேந்தன்பட்டி.

திருவள்ளுவர் வாசகசாலையின் எட்டாவது கூட்டம்:—இக்கூட்டம் துன்மதி ஹூ ஆடிமீ கட (16-7-21) சனிக்கிழமை கூடவேண்டி யிருந்தும் ஆனிமீ ௩கஉ ௩உஉ கோவிலூரில் நடந்த தனவைசிய மகாநாட்டுக்குச் சென்றிருந்தமையால் நடைபெறவில்லை. நாளிதுஹூ ஆடிமீ கருஉ (30-7-21) சனிக்கிழமை மாலை ருஹ-மணிக்கு வாசகசாலை உப காரியதரிசி ஸ்ரீ நா. சொ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் தலைமையில் கூடியது. அவைத் தலைவர் முகவுரை மொழிய, வலையபட்டி ஸ்ரீ அ. நாகப்பசெட்டியார் "பாலியவிவாகம்" என்பதையும், ஸ்ரீ. குப. நா. குப்பான்செட்டியார் "தூர்ப்புத்திரரியல்பு" என்பதையும், ஸ்ரீ கரு. சேவகன்செட்டியார் "சிவனடியார் பெருமை" என்பதையும் ஸ்ரீ சித. சுப. முத்தையா செட்டியார் "வீடுபெறுநில்" என்பதையும்பேச தலைவர் கடிவன கடிந்து காப்பன காத்தார். சபை ருஹ மணிக்கு இனிது நிறைவேறியது.

## நமது நாட்டுத் தீர்மானம்.

கோவிலூரிற் கூடிய நமது தொண்ணூற்றூரார்க் கூட்டத்தில் பெண்ணுக்கு ரூபாய் ஐயாயிரத் தொன்றுக்குள்தான் கொடுக்கலா மென்றும் கூட்டத்திற்கு முன் பேசிமுடிவுபெற்றிருந்தால் ஆடிமீ கOஉக்குள் அவ்வவ்வூர் நகரத்தாரிடம் எழுதி வைத்துவிடவேண்டு மென்றும் தீர்மானமாகி யிருப்பது யாவருமறிந்த விஷயம். அவ்விதமிருக்க அதற்கு முரணாகச் சிலர் ஆடி மாதத்திலேயே பெண்ணுக்கு அதிகத் தொகை பேசி முடிவு செய்து, கூட்டத்திற்கு முன்பே பேசியதுபோல் நகரத்தாரிடம்எழுதிவைத்திருப்பதாகத் தனவைசிய வாலிபர் சங்கத்தாரால் கண்டு பிடிக்கப்பட்டு அதற்குவேண்டிய ஏற்பாடு செய்து வருவதாக அறிகிறேன். பெண்ணுக்கு அதிகத் தொகை வாங்க நினைக்கும் ஒவ்வொருவரும் தேவசபையையொத்த நமது அகில வட்டகைத் தீர்மானத்தை மீறிநடப்பது முறையன்றென்பதையும், அசத்தியவந்தர்களாகிவிட்டால் பெண் புகுந்த இடத்தில் நன்றாக வாழவேண்டுமே யென்பதையும் நினைந்து, பின்பு பேசி முன் பேசியதாக எழுதிவைத்திருக்கும் மாப்பிள்ளைகளுக்கே தீர்மானத் தொகையாகிய ஐயாயிரத்தை வாங்கிக்கொண்டு செய்வதாக நகரத்தார்களிடமும் தெரிவித்து அதுபோல் செய்வார்களானால், தீர்மானத்தை நிலைநிறுத்தியதோடு மற்றோருக்கும் வழிகாட்டியாவார்கள் அவர்களவ்விதம் செய்யாவிடில் அவ்வவ்வூர் நகரத்தார்கள் நமது கௌரவத்தைக் காப்பாற்றும் பொருட்டு நமது ஒற்றுமையை ஏனையோரும் தெரிந்து கொள்ளும் பொருட்டு தாட்சண்யம் பாராமல் அதற்கு வேண்டிய விதாயத்தைச் செய்தே தீரவேண்டும். "இதைச் சாடையாய் விட்டுவிட்டால் இனிமேல் கவனித்துக்கொள்ளலாம்; இப்பொழுதே மிகக்கண்டிப்புச் செய்தால் கட்சி திரட்டி விட்டாலென்ன செய்கிற" தென்று சிலர் சொல்கிறார்கள். இவர்கள் நோக்கம்போல் இப்பொழுது சும்மாவிருந்துவிடுவோமேயானால் இதன் பின் ஒருவர், எல்லோரும் அறியவே அதிகத்தொகையை வாங்கிக்கொண்டு பெண்ணைக் கலியாணம் செய்வாரானால் தீர்மானத்திற்கு அவரைக் கட்டுப்படுத்த வேண்டுமல்லவா? அப்பொழுது பின்னால் பேசியதை முன் பேசியதாகச் செய்த கல்யாணங்கட்கெல்லாம் நகரத்தார் என்ன செய்தார்களென்று கேட்பார்களன்றோ? அப்போது கலியாணங்களை யெல்லாம் முடித்துவிட்டு வீட்டிலிருக்கும் இவர்களை அப்பொழுது கூப்பிட்டுக் கேட்பதா? அப்படிக் கேட்கும்போது இருதிறத்தாரும் சேர்ந்து பெருங்கட்சியாக்கிவிடமாட்டார்களா? ஆனதால், அவ்வப்போதே தாட்சண்யமாகவாவது ஜாடையாகவாவது விட்டுவிட நினையாமல் அதற்குவேண்டிய ஏற்பாட்டைச்செய்ய வேண்டுமென்றுமறுமுறையும் வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மு சோமசுந்தரம் சிறுவயல்.



# தனவைசிய வாலிபர் மகாநாடு.

ஆவணிமீ ௩,ச-தேதி வியாழன் வெள்ளிக்கிழமைகளில்
ஸ்ரீமாந சோ. முருகப்பசெட்டியாரவர்கள் தலைமையில்

## கோனபட்டில் நடைபெறும்

வாலிபர் ஒவ்வோருவரும் விஜயம்செய்தல் வேண்டும்.

பேரியோர்களும் பெண்களும் இக்காட்சியைக் காண வேண்வேதவசியம்.

அகில தனவைசிய வாலிபர் சங்கக் காரியதரிசி ஸ்ரீமான் வயி. சு. ஷண்முகஞ் செட்டியார் எழுதுகிறார்:—

நிகழும் ஆவணிமீ ௩உ சஉகட்குச் சரியான ஆகஸ்டு கஅ ககூஉ களாகிய வியாழன் வெள்ளிக்கிழமைகளில் கோனபட்டில் நமதுவாலிபர் சங்கத்தின் முதலாவது மகாநாடு கூட்டுவதற்கான ஏற்பாடுகள் மிக மிகத்துரிதமாகநடைபெற்றுவருகின்றன. கோனபட்டிலுள்ள இலுப்பைக்குடி நகரத்தாரைச்சார்ந்த புது ஊருணிக் கரையில் சுமார் உரு00 ஜனங்கட்கு அதிகமாக இருக்கக் கூடிய அலங்காரக்கொட்டகை ஒன்றுதயாரிக்கப்பெற்றிருக்கின்றது. அங்கத்தினர்கள் காணவருபவர்கள் பெண்கள் ஆகிய யாவரும், உட்காருதற்குத் தனித்தனியாகக் கொட்டகையில் இடங்கள் பிரித்து அழகுபடுத்தப் பெற்றிருக்கின்றன. கொட்டகையின் நடுவில்மகாநாட்டை நடாத்தும் பொறுப்புவாய்ந்த தலைவர் முதலியவர்கள் உட்காருதற்கு மிக மிக அழகான மேடை ஒன்றுஎந்த பாகத்திலுள்ள ஜனங்கட்கும் அங்கு நடைபெறும் விஷயங்கள் நன்றாகத் தெரியும்படியாக அமைக்கப் பெற்றுள்ளது. பெண்கள் முதல் யாவரும் உட்காருதற்குக் கொட்டகை முழுமையும் ஏராளமான நாற்காலிகளும் குரிச்சிகளும் பரப்பப்பெற்று வருகின்றன. ஒவ்வொரு வகுப்பாருங் கொட்டகையினுட்செல்லுதற்குத் தனித்தனியான பாதைகள் உண்டு. அனுமதிச் சீட்டு அடையாளப் பூக்கள் முதலிய யாவும் கோனபட்டிற் றான் அளிக்கப்பெறும். ஜாகை சாப்பாட்டு வசதி முதலிய யாவும் மிகவும் சௌகரியமாக ஏற்படுத்தப் பெற்றிருக்கின்றன. மகாநாட்டிற்கு வருபவர்களின் சௌகரியத்திற்காக இச்சா சேவகர்கள் அறுபது பெயர்கட்கு மேல் தயாராக்கப்பெற்று வருகின்றனர். மகாநாட்டின் கொட்டகையில் இடை இடையே தொங்கவிடுதற்கு மகான்களின் வாக்கியங்களடங்கிய அட்டைகள் சுமார் ருo வரை தயாராகிவருகின்றன. கோனபட்டு வாலிபர் சங்கத்தாரே உபசரணைக் கூட்டத்தாராகவும், அச்சங்கத்தலைவரே உபசரணைக்கூட்ட அக்கிராசனராகவும் இருந்து கடமையைச் செய்வார்கள். ௩-தேதி பிற்பகல் ௩-மணிக்கு கோலாகல வைபவத்தோடு தலைவர்கள்ஜாகையிலிருந்து மகாநாட்டின் அலங்காரக் கொட்டகைக்கு அழைத்துச் செல்லப் பெறுவார்கள். அதற்குள்ளாகக் கொட்டகை முழுமையும் ஜனங்கள் வந்து கூடிவிடல் வேண்டும். முதலில் கடவுள் வாழ்த்துப் பாடப்பெற்ற பின்னர் அக்கிராசனாதிபதியவர்கள் பிரேரேபணை நடைபெறும். அக்கிராசனர் ஆசனத்தமர்ந்த பின்னர் உபசரணைக் கமிட்டித் தலைவரவர்கள் வரவேற்பை வாசிப்பார்கள். அதன்பின்தலைவரவர்கள் முகவுரைப் பிரசங்கம் நடைபெறும். அது முடிந்த பின்னர் விஷய ஆலோசனைக் கூட்டத்திற்கு அங்கத்தினர்களைத் தெரிந்தெடுக்கப்பெறும். இவ்வளவோடு முதல்நாள் நடவடிக்கை முடிவுபெறும். முதல்நாள்இரவும் நேர்ந்தால் மறுநாட் காலையிலும், விஷய ஆலோசனைக் கூட்டம் நடைபெறும். அக்கூட்டத்தில்எந்தெந்த விஷயங்கள் மகாநாட்டிற்குக்கொண்டு வரலாமென்று யோஜித்து முடிவு செய்வார்கள். அந்த விஷயங்கள் தாம் மகாநாட்டில் வாதித்து முடிவு செய்யப்படும்.

அது முடிந்தபின்னர் மகாநாடு ஆரம்பமாகி தீர்மானங்கள் கொண்டு வரப்பெற்று முடிவிற்கு வரும். சஉ இரவோடு இம்முதலாவது மகாநாடு பூர்த்தியாகலாம். அடுத்த வருடம் இம்மகாநாட்டை எந்தவூரில் நடத்துவது என்பதும் இம் மகாநாட்டின் முடிவிலேயே தீர்மானமாகி விடும். மகாநாட்டில்தீர்மானஞ் செய்யவேண்டிய முக்கியமான விஷயங்களைப் பற்றி ஆங்காங்குள்ள அறிவாளிகள் சிந்தித்து மகாநாட்டின்பரிசிலனைக்குக்கொண்டுவருதல் வேண்டும்.

இம் மகா நாட்டிற்கு அங்கத்தினர் ஒவ்வொருவரும் கட்டாயம் விஜயஞ்செய்வதோடு தங்கள் தங்கள் பெண்களையும் அழைத்துக்கொண்டு வரல்வேண்டும். ஏனையோரும்ஏனைய பெண்களும் ஏராளமாக வந்து கூடல்வேண்டும். இத்தகைய முறையில் நடாத்தும் மகாநாடு நமதுதனவைசியர்கட்கு இதுவே முதன்முதலாகலின் விஜயம் செய்ய ஒருவரும் தவறப்படாது. மகாநாடு காணற்கரிய காட்சியாக இருக்கு மென்பதைப் பற்றிஅதிகமாக யான் விரித்தெழுத வேண்டுவது அநாவசியம். அதன் வைபவத்தை அங்கு போய் வருபவர்கள் சொல்லக்கேட்டு ஐயோ நாம் செல்லவில்லையே என்று பின்பு வருந்தாது கட்டாயமாக ஒவ்வொரு தனவைசிய சகோதரர்களும் முதல் நாளே விஜயம்செய்து அங்கு நடைபெறும் சகலவிஷயங்களையும் கண்டு களிக்க வேண்டுமென்று மும்முறை மிகத்தாழ்மையோடு கேட்டுக்கொள்கிறேன்.



நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

---

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி ஆடிமூ உ௮உ.

---

## வாலிபர் சங்க மகாநாடு.

உலகத்திலே நடைபெற்றிருக்கிற பெருங் காரியங்கள் பெரும்பாலாக வாலிபர்களாலேயே நடைபெற்றிருக்கின்றன. ஒரு நாடு ஒரு ஜாதி முன்னேற வேண்டுமானால் அங்குள்ள வாலிபர்கள் தீரமாகவும் தீவிரமாகவும் உண்மையாகவும் வேலை செய்தாலல்லது முன்னேற முடியாது. வாலிபர்களது இயக்கம் சரியானபடி எங்கு இயங்கவில்லையோ அந்த சமூகம் அரைகுறையான உயிரோடுதான் வாழும். சென்ற பல ஆண்டுகளாக நமது சமூகமானது தன் மட்டில் வாழ்ந்தாற் போதும் என்று கருதிய சுயகாரிய துரந்தரர்களும், தன் காரியத்திற்குச் சிறிது இடையூறு வருமென்று தெரிந்தால் அதற்காகப் பெரிய பெரிய பொதுக்காரியங்களைப் பாழ்படுத்துங் குணமுடையவர்களும், எதுஎப்படியானாலென்ன வென்று கருதிய அலக்ஷிய புத்தியுடையவர்களும் மலிந்து நின்றபடியால் எண்ண முடியாத-அநுபவிக்க முடியாத-பலராலும் மதிப்புச்செலுத்தமுடியாத பலதுன்பங்கட்கு உட்பட்டிருந்தது. இந்த நிலை மாற்றப்படவேண்டும். எந்தக்காரியத்திலும் கௌரவம் வருமா அகௌரவம் வருமா வென்று சந்தேகித்து முன் வருவதற்குச் சில வயதானவர்கள் பயப்படுவார்கள். மேலும் ஒற்றுமை கெட்டு நிற்கிற இந்த சமூகக் காரியங்களை யெப்படித் திருத்த முடியுமென்று சிலர் கருதுகின்றனர்.

இத்யாதிகாரணங்களால் வயதானவர்கள் இதன் முன்னணியில் வந்து வேலை செய்வதென்பது முடியாத காரியம். ஆதலால் ரக்தமும் நரம்பும் பலமடைந்திருக்கிற வாலிப சிம்மங்கள் முன் வந்துவிடவேண்டும். வாலிபர்கள் முன் வந்து வேலைசெய்வது நியாயமாக இருக்குமாயின் பெரியோர்கள் பக்கபலமாக நிற்பார்களென்பதை நேரிற் பார்க்கிறோம். ஆனால் நியாயமான காரியமென்பதை அவர்கள் அறிந்து கொள்கிற வரை பொறுமையாகவும் தைரியமாகவும் ஊக்கமாகவும் வேலை செய்து வரவேண்டும்.

இப்போது முக்கியமாக வாலிபர் கைக்கொள்ள வேண்டுவது ஒற்றுமையேயாகும். உபயோகமற்றகட்சிப் பிரதிகட்சிகளில் தலையிடாது எந்தக் கட்சியில் யாரிருந்தாலும் வாலிபர்கள் கட்சிபேதங்களைப் பாராட்டாது சொந்த சகோதரர்களாகவே ஒருவரையொருவர் பாராட்டவேண்டும். வேற்றுமைப்பட்டிருக்கிற- அல்லது ஒற்றுமை நீங்கியிருக்கிற ஒரு கூட்டத்தில் ஒற்றுமையை உண்டாக்க வேண்டுமானால், ஒரு புதிய உணர்ச்சியை உண்டாக்க வேண்டும். தற்போது தற்கால இயல்பை யநுசரித்தே இந்த வாலிபர் சங்க மகாநாடு கூட்டப்படுகிறது. இம்முறையானது ஜனங்கள் பலநாள்காத்திருந்து சிரமமெய்தாமலும், பேசுகிற விஷயத்தை யாவரும் கஷ்டமின்றி யறிந்துகொள்வதற்கும், தனித்தனி அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கும் சௌகரியமாக இருக்கும். இக்கூட்டத்திற்கு இருபாலாருமாக சுமார் மூவாயிரம்ஜனங்கள் விஜயஞ் செய்வார்களென் றெதிர் பார்க்கப் பெறுகிறது. வாலிபர் சங்கங்களின் அங்கத்தினர்களும், ஜாதியபிமானிகளும் கட்டாயம் வந்து சேர்வார்கள். இந்த மகாநாடு கூடுவதிலிருந்து நமது நாட்டில் ஒரு புதிய சக்தி உண்டாகப் போகிறது. எதிர்கால வாழ்க்கையின் அஸ்திவாரமே இம்முதலாவதுமகாநாடாகும்.

இக்கூட்டத்திற்கு வருகிற வாலிப சிம்மங்கள் தீர்மானங்களைத் தைரியத்தோடும் ஜாதீயப் பெருமையைக் காப்பாற்றியும் தங்கள் செல்வப் பெருக்குக்கும்புத்திசாலித்தனத்துக்கும் தகுந்த மதிப்பை மற்றவர் நம்மிடம் செலுத்துமாறும் தீர்மானங்களைச் செய்தல் வேண்டும். செய்த தீர்மானங்களை அணுவளவுந் தவறாது உறுதியாக அநுட்டித்தல் வேண்டும். இம்மகாநாட்டிற்கு வாலிபரொவ்வொருவரும் ஜாதீயப்பொது வாழ்வில் அநுதாபமுடைய பலரும் வரவேண்டுமென்று நாமொருமுறை கூறவேண்டுவதில்லை. எல்லாப்படியாலும் மகாநாடு இனிது நடைபெற இறைவன்திருவருள் சுரப்பாராக.

---

## எண்டிசைக்காட்சி.

---

### அடுத்தவாரம்.

அடுத்த வியாழன் வெள்ளி யிரண்டு நாளும் ஆவணியவிட்டத்தின் பொருட்டு விடுமுறை, நாளாகும். ஆதலால் அடுத்த இதழ் ஆவணிமீ ககஉ வெளிவரும்.

### மரியாதை.

இராமநாதபுரம் ராஜா அவர்கள் நமது ஜில்லாபோர்டுக்குத் தலைவராவர். போர்டில் செய்யப்பட்ட தீர்மான சம்பந்தமாக இவ்வூர்பொது ஜனக்கூட்டத்தின் தலைவர் தெரிவிக்கும்போது மரியாதையாக எழுதவில்லையாம். கூடியவரை மிக்க மரியாதையோடு தான் எழுதப்பட்டிருக்கிறதென்று நாம் அறிவிக்கப்படுகிறோம். ஆனால் ராஜா அவர்கள் எந்த இடத்தில் மரியாதை நழுவிப்போய் விட்டதென்று குறிப்பிடவில்லையாம்.

### எனக்கு வேண்டும். உனக்கு வேண்டாம்.

மரியாதையோடு எழுதப்பட்ட கடிதத்தில் மரியாதையில்லை யென்று வருத்தப்படுகிற ராமநாதபுரம் ராஜா அவர்கள் தாம் பொதுக்கூட்டத்தின் தலைவருக்கு எழுதியுள்ள கடிதத்தில் "M. N. C. T. நாகப்ப செட்டி" என்று தீட்டிவிட்டார்கள். இந்த மாதிரியாக - மரியாதை யற்ற விதமாக-எழுத ஒரு தமிழ் நாட்டிற் பிறந்த ராஜாவின் மனம் சம்மதித்ததற்கு நாம் வருந்துகிறோம். "மரியாதை யெனக்குவேண்டும். உனக்கு நான்மரியாதைசெலுத்தமாட்டேன்" என்று கூறுவது எவ்வளவு அழகு.

### அச்சிட்டதையும்அடிப்பதோ?

காகிதத்தின் மேலுறையில் ஏற்கனவே M R Ry. என்று அச்சிட்டிருந்ததை அடித்துவிட்டு அனுப்பப்பட்டிருக்கிறதென்பதை யறிய மிக வருந்துகிறோம். ராமநாதபுரம் ராஜா ஏன் இப்படி நடந்துகொள்ள வேண்டுமோ?

### ஊழியர் சங்கத்திற்கு உதவி.

தாணிச்சாவூரணி ஸ்ரீமாந் ராம. கரு. கருப்பன் செட்டியாரவர்கள் நமது ஜாதீயக் கூட்டத்தின் செலவுக்காக ரூபாய் அறுநூறு உதவியிருக்கிறார்கள். ஸ்ரீமாந் செட்டியாரவர்களின் ஜாதியபிமானத்தையும் உதாரகுணத்தையும் பாராட்டி நன்றி செலுத்துகிறோம்.

சங்கத்தின் செலவுக்காக உபயோகப்படுத்திக் கொள்ளுமாறு கொத்தமங்கலம் நகரத்தார் ரூபாய் இருநூற்றைம்பதும், பள்ளத்தூர் நகரத்தார் ரூபாய் அறுநூறும் அனுப்பியிருக்கிறார்கள். அவர்களது பெருந்தன்மைக்கும் ஜாதியபிமானத்திற்கும் நன்றி செலுத்துகிறோம்.

கோனபட்டு ஸ்ரீமாந் பெ. அ. லெ. அண்ணாமலை செட்டியாரவர்கள் தமது குடும்பத்தில் நடைபெற்ற காப்புக்கட்டுப் புதுமையில் ...ம்பாவனை செய்தனுப்பிய ரூபாய் ...த்து வரப்பெற்றோம். ஸ்ரீமாந் செட்டியாரவர்களின் ஜாதியபிமானத்திற்கு நன்றி செலுத்துகிறோம்.

காரியதரிசி
தனவைசிய ஊழியர் சங்கம்.

---

## ...ள்ளூர்வர்த்தமானம்.

---

...பொதுஜனக்கூட்டம்:—௬—௪—உக ...ரீடிங் ரூமில் ஒரு பொது ஜனக்...ம் கூடியது. தஞ்சாவூர் ஜில்லா ...டு மெம்பர் ஸ்ரீமான் S. A. S. ராமநாதன் செட்டியார் அவர்கள் ...சனம் வகித்தார்கள். பின் கண்ட ...னம் ஏகோபித்துத் தீர்மானித்தார்



க. சமீபத்தில் நடைபெற்ற பொது ஜனமீட்டிங்கின் தீர்மானங்களை அந்தக் கூட்டத்தின் தலைவர் ஜில்லா போர்டு பிரசிடெண்டான ராமநாதபுரம் ராஜாவுக்கு அனுப்ப, அவர் அந்தத் தீர்மானங்களடங்கிய கிருபத்தை மரியாதையான வாசகத்தில் எழுதப்படவில்லை யென்று ஆதாரமில்லாத காரணங் கூறித்திருப்பியனுப்பிவிட்டார். இந்தச் செய்கையை இந்தக்கூட்டம் கண்டிக்கிறது,

உ. மேற்சொல்லிய கிருபத்தை மறுபடியும் வாசித்துப் பார்த்ததில் அதில் ஒருவிதமான மரியாதைக் குறையுமில்லை யென்று இந்தக்கூட்டம் நிச்சயமாயறிந்திருக்கிறது.

ங. பிறரிடம் மரியாதையை வேண்டுகிற ராமநாதபுரம் ராஜா அவர்கள் மேலே கூறியபடி தீர்மானங்களைத் திருப்பி அனுப்புங்கால் "காரைக்குடி பொது ஜன மீட்டிங்கு சேர்மன் M. N. S. T. நாகப்பசெட்டிக்கு" என்று "அவர்கள்" என்ற பதத்தைச் சேர்க்காமலும், ஆபீஸ் லகோடாவில் அச்சிட்டிருந்த M. R. Ry. (மகா-ள-ள-ஸ்ரீ) என்ற எழுத்துக்களை மையினால் அடித்தும்விட்ட மரியாதைக் குறைவான காரியம் ஆச்சரியத்தையும், வருத்தத்தையும் இந்தக் கூட்டத்தாருக்கு விளைவிக்கிறது. ஜில்லாவின் ஜனப்பிரதிநிதி சங்கங்களில் முக்கியமான ஜில்லா போர்டின் தலைவராயுள்ளவருக்கு அழகாயில்லாத இக்காரியத்தை இந்தக் கூட்டம் பலமாய்க் கண்டிக்கிறது.

௪. இப்படிப் பெரியதவறுசெய்ததற்கு ராமநாதபுரம்ராஜா அவர்கள் மகா-ள-ள-ஸ்ரீ M. N. S. T. நாகப்பசெட்டியாரவர்களை சீக்கிரத்தில் மன்னிப்புக்கேட்டுக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறது.

---

## ஒரு பொதுஜனக்கூட்டம்.

---

காரைக்குடி வாசகசாலையில் ௧0-௮-உக புதன்கிழமையதினம் மாலை 6மணிக்கு இவ்வூரில் களவின் மிகுதியும் பந்தோபஸ்தின் குறைவும் என்பதைப்பற்றி ஒரு கூட்டம் கூடி ஆலோசித்துத் தீர்மானங்கள் செய்யப்பெற்றிருக்கின்றன. அடியில்கண்ட தந்திகள் உடனேஇராமநாதபுரம் ஜில்லா போலீஸ் சுப்பரிண்டெண்டுக்கும் இராமநாதபுரம் ஜில்லா கலெக்டருக்கும் கொடுக்கப்பெற்றன:— காரைக்குடி மிகவும் பந்தோபஸ்துக் குறைவாய் இருக்கிறது இப்பொழுது வீட்டைஉடைத்தல், திருட்டு, தாக்குதல் முதலானவைகள் பிரதிதினமும் நடக்கின்றன.

தகுந்தபரிகாரம் தேடவேணுமாய்க்கேட்டுக்கொள்கிறேன்.

அண்ணாமலைசெட்டியார்.
அக்கிராசனர்.
பொதுஜனக்கூட்டம்.

## தந்திச் செய்தி.

---

சைகோன் ஆடிமீ உஎஉ
மதராஸ் உண்டியல் விலை இருநூற்று.
சிங்கப்பூர்வட்டம் பதினேழு.
பினாங்கு ஆடிமீ உஎஉ
மதராஸ்உண்டியல் விலை நூற்று எழுபத்தெட்டு.
ஈயம் விலை எழுபத்தெட்டு.
ரப்பர் விலை இருபத்தாறு.
சுப்போ ஆடிமீ உஎஉ.

தனவைசிய வாலிபர் மகாநாடு
C|o. ஊழியன் காரைக்குடி.
மகாநாடு ஜயம் பெறுமென்று விரும்புகிறோம். ஜாதீயச்சீர்திருத்தத்தைக் காப்பாற்றுங்கள். அங்கத்தினர்களின் தகுதியான உழைப்புக்காக அன்புபொருந்தியநன்றி பாராட்டுதலுக்கு அடையாளங் கொடுங்கள்.

தனவைசிய சங்கம்.

---

## யூனியன் வரி விஷயம்.

---

யூனியன் வரி விஷயமாக ராமநாதபுரம் ஜில்லா போர்டில், ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதாவது ஒரு லட்சம் ரூபா பெறுமதியுள்ள வீட்டுக்கு மூன்னூறு ரூபா வரி விதிக்க வேண்டுமென்று தீர்மானித்திருந்தார்கள். இந்தமாதிரியாக வரிவிதிக்க ஜில்லா போர்டாருக்கு அதிகாரமில்லை யென்பது ஜனங்களின் தாவா. அநேகமாக நமது நாட்டிலுள்ள எல்லா யூனியனும் ஆக்ஷேபித்திருக்கின்றன.

இது சம்பந்தமாகப் பல கண்டனக்கூட்டங்கள் நடைபெற்றன. ஸ்ரீமான்களான காரைக்குடி வீ. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள் சித. நா. ராம. நாராயணன் செட்டியாரவர்கள் சி. மு. அரு. முத்துராமன் செட்டியாரவர்கள் தேவகோட்டை கரு. கி. சொர்நாதன் செட்டியாரவர்கள் தி. அ. சு. அ. சுப்பையா செட்டியாரவர்கள், வீர. லெ. சிதம்பரஞ்செட்டியாரவர்கள், கோட்டையூர் ராவ்சாகேப் பெ. க. அ. சித. வீரப்பசெட்டியாரவர்கள் M. B. E., பெ. மு. அ. வெள்ளையன் செட்டியாரவர்கள், பள்ளத்தூர் அ. மு. மு. முருகப்பசெட்டியாரவர்கள், ஒரானரபில் ராவ்பகதூர் மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள், ராவ்சாஹெப் மு. சித. முத்தையாசெட்டியாரவர்கள் இப்பதினொரு பிரதிநிதிகள் ஆடி-மீ ககூஉ பிற்பகலில் லோகல்போர்டு மந்திரியையும் செக்ரடரியையும் பேட்டி கண்டார்கள். அதன் பயனாகச் சட்டாயம் யூனியன் வரி பழய நிலைமைக்கு வந்துவிடுமென்று திட்டமாக நம்ப இடமிருக்கிறது.

நிருபர்.

## கொழும்பு.

சு—அ—உக

இவ்வூரில் உ௮-எ-உகல் "இந்திய வாலிபர் சங்கம்" என்ற பெயரோடு செட்டித்தெரு கூ௨உ-ம் நம்பர் வீட்டில் ஸ்தாபிக்கப்பெற்றுள்ளது. அதன் சார்பில் உக-எ-உகல் "கடவுள் வழிபாடு" "சங்கமும் அதன் நன்மையும்" என்ற விஷயங்களும் உ௬-எ-உகல் "அன்பு" என்ற விஷயமும் ௩௧-எ-உகல் "கல்வி" என்ற விஷயமும் பல அறிஞர்களால் உபந்யசிக்கப்பெற்றன.

திலகமகரிஷியின் வருஷாப்தீக தினமாகிய க-அ-உகல் மேற்படி சங்கச்சார்பில் பகல் ௧௨-மணிக்கு அப்பெரியார் போல் ஏழைகளுக்கு அன்னதானமும் ஸ்ரீ முத்து விநாயகர் கோவிலில் அர்ச்சனையும் நடந்தன. அன்று மாலை ௫-மணிக்கும் சங்கக் கட்டடத்தில் கூட்டங்கூடி ஸ்ரீமான் காசிவிஸ்வநாதபிள்ளையவர்கள் அக்கிராசனத்தில் திரு. அமிர்தலிங்கமுதலியாரவர்களாலும் ஸ்ரீமான் வ. ராம. வ. அ. லெட்சுமணச்செட்டியாரவர்களாலும் திலகர் பெருமான் தீர வீரச் செயல்கள் புகழ்ந்துரைக்கப்பெற்றன. ஸ்ரீமான் பழனியப்ப செட்டியாரவர்கள் வாழ்த்துக்கள் கூறினார்கள். அப்பொழுது சபை முழுதும் "திலகர் பெருமானுக்கு ஜேய்" "மாகாத்மா காந்திக்கு ஜேய்" "அரகர மகாதேவ" என்ற கோஷம் நிறைந்திருந்தது. பின்னர் அக்கிராசனர் முடிவுரையுடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

இவண் நம் இந்திய மக்களுக்கு இதுவரை ஒரு சங்கம் ஏற்படாதிருந்தது ஓர் பெருங் குறையாயிருந்ததெனினும் இனியாவது உண்மை பாரதபுத்திரர் அனைவரும் சிரத்தையெடுத்து சங்கத்தை நீடூழி வளரச் செய்யவும். இச்சங்கத்தின் நலங்கோரி உழைத்து வரும் ஸ்ரீமான் வ. ராம. வ. அ. லெட்சுமணன் செட்டியாரவர்களுக்கும், வே. மீனாட்சிசுந்தரம் அவர்களுக்கும் நீண்ட ஆயுள் ஆரோக்கியத்தையும் இறைவன் அருள்புரிவாராக.

சோமு. சுப்பிரமணியன்,
காரியதரிசி, இந்திய வாலிபர் சங்கம்.

## பம்பாயும் பரதேசத் துணியும்.

௩க—எ—உக.

இன்று ௫-௩௦-க்கு வெல்லிங்டன் ரோட்டுக்கடுத்த மைதானத்தில் அன்னிய தேசத்துணிகளை நெருப்பிலிடுவதாய்க் குறிப்பிட்டிருந்தது. ௩-மணி முதல் ஜனங்கள் வந்து கொண்டேயிருந்தனர். காலடி ௫௦ கொண்ட தன்னச் சதுரமுள்ள இடத்தில் கூ௯ கால் நட்டு சுற்றிலும் தகரங்களாலடைக்கப் பெற்று, முன் வந்ததும் இன்னும் சேர்ந்தனவுமான பிறநாட்டுத் தொப்பி சட்டை ஷர்ட்டு கோடை புடவை வேட்டி பட்டு வகையறாக்களும் குவிக்கப் பெற்றிருந்தன. ௩-மணி முதல் நெருப்பிடுமிடத்தில் பரதேசத்துணி பட்டுமுதலியவை காக்கையைப் போல் பரந்து விழுந்து கொண்டே இருந்தன. இக்காக்ஷி பெரும் பக்ஷிக்கூட்டங்கள் யுத்தஞ் செய்வது போலவேயிருந்தன ௫-௦-மணிக்கு மகாத்மா காந்தியும் சேலம் விஜய ராகவாச்சாரியாருமாக மோட்டாரில் வந்தனர். "மகாத்மா காந்திக்கு ஜேய்" என்ற சப்தம் இடைவிடாதொலித்துக் கொண்டிருந்தன. ௫-௩-மணிக்கு நெருப்பிடப்பட்டது. கூடிய ஜனங்கள் இத்தனை ஆயிரமென்று மதிப்பிட முடியாதிருந்தது, மதில் மரம் ஓடு ரயில் வண்டி இஞ்சின் முதலியவைகளில் இடைவிடாது நெருங்கியிருந்தனர். வந்த ஜனங்களனைவரும் சுதேச உடையே தரித்திருந்தனர். தப்பித் தவறிக் கொண்டுவந்த பரதேச உடை லெச்சை பொறுக்காது பாய்ந்து நெருப்பில் விழுந்தன. ஜனங்கள் திரும்புகாலில் பலரோட்டுகளிலும் எள் விழ இடமில்லை. ௫ நிமிஷத்திற்கோர் முறை செல்லும் பீ. பீ. அண்டு சீ—ஜி. ஐ. பி. வண்டி அரை மணி நேரம் நின்று விட்டன. டிராம்கார்களில் ௭ட்டுக்கு உபேர் யென்ற கணக்குக்கு மிஞ்சி ஜனங்கள் புளிமூட்டைகள் போல் அடைத்துகொண்டு மகாத்மாவுக்கு ஜேய் யென்ற ஒலி ஒலித்துக்கொண்டே சென்றார்கள். இன்றுதேவலோகக்காட்சியாகவே இருந்தது. இவ்வூர் ஜனங்களுக்குச் சுதேசியத்திலிருக்கும் ஊக்கம்போல் சென்னை மாகாணத்திற்கு எப்பொழுதேற்படுமோ தெரியவில்லை. கூட்டத்தின் கணக்கு ௩ லட்சம் இருக்குமென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

சுப. ராம. கந்தசாமிச்செட்டி
பாம்பே.

## ஆ. முத்துப்பட்டணம்.

நாளிதுமீ கந-உ சனிக்கிழமைபிற்பகல் நான்கு மணிக்கு ஸ்ரீலோகநாயகி வாசகசாலையின் சார்பில் சு நா பங்களாவில் ஸ்ரீமான் சி. சு. சா. சிதம்பரஞ்செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் ஸ்ரீமான்களான நாக.நா.நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள் கூ௬ ஊர்க்கூட்டத்தின் தீர்மானம்உறுதிக்குக்கொண்டு வரவேண்டும் என்பதைப் பற்றியும், ராம. அழ. அருணசலம்செட்டியாரவர்கள் தாய்மார்களுக்கு வேண்டுகோளென்பதைப்பற்றியும், பி.சித.நாச்சியப்ப செட்டியாரவர்கள் கண்காட்சிசாலை திறந்து வைத்தலின் கண்டனம் என்பதைப்பற்றியும்பிரசங்கித்தார்கள். பின்னர் தலைவரவர்கள் முடிவுரைகூறவே ஸ்ரீமாந் சி. நா. ராம ராமசாமி செட்டியாரவர்கள் வந்தனோபசாரம்கூறி வாழ்த்த சபைஇனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

## இராயவரம்.

### தனவைசிய வாலிபர் சங்கம்

அன்புமிக்குடைய ஐயன்மீர்!

அகில தனவைசிய வாலிபர் சங்கத்தின் கிளையாக இவ்வூரின் கண் எல்லாம் வல்ல இறைவன்றிருவருளால் துன்மதிவருஷ ஆடிமீ கக௨ புதன்கிழமை ஆடி அமாவாசை புண்ணிய தினமாகிய இன்று பிற்பகல் ௬௨, மணிக்கு சாத. க. மு. சு. பாடசாலைக்கட்டிடத்தில் ஸ்ரீமாந் வெ. மு. அரு. மு. ராமராமசாமி செட்டியாரவர்கள் தலைமையில் சங்கம் ஸ்தாபிக்கப்பெற்றது. கடியாபட்டி ஸ்ரீமாந் சு. பழநியப்பா அவர்களும் அரிமழம் ஸ்ரீமான் பழ. அண்ணாமலை செட்டியாரவர்களும் கடியாபட்டி ஸ்ரீமாந் வ சு. சு. சுப்பிரமணியஞ் செட்டியாவர்களும் மாலை ச-மணிமுதல் ௬௨-மணிவரை அரிய உபந்யாசங்கள் செய்தார்கள். தலைவரவர்கள் முடிவுரைகூறி வெ. அக. அழகப்பசெட்டியாரவர்களால் வந்தனோபசாரம் செய்யப்பெற்று சந்தன தாம்பூலாதிகள் வழங்க எ-மணிக்கு சபை மங்களகரமாக நிறைவெய்தியது. சுமார் ௭௦ பெயர்கள் வரை விஜயஞ்செய்து மிகச் சிரத்தையோடு சிரவணஞ்செய்தார்கள். இச்சங்கத்தில் இப்பொழுது முப்பத்திரண்டு மெம்பர்கள் சேர்ந்திருக்கிறார்கள். மற்ற அன்பர்களும் இதன் நன்மை கருதி மெம்பர்களாகச்சேர்ந்து மிக ஒற்றுமையோடு ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

### நன்கொடை.

இச்சங்கத்திற்குஉள்ளன்போடுழைத்து வரும் ஸ்ரீமாந் சு. கதிரேசச்செட்டியாரவர்கள் இச்சங்கத்திற்கு ரூபா நூறு நன்கொடையளித்திருப்பது மிகப்பாராட்டத்தக்கது.





## தனவைசிய வாலிபர் சங்கம்.

### வேந்தன் பட்டி.

இவ்வூரில் ஆடி-மீ உச-உ பிற்பகல் ச-மணிக்கு தனவைசிய வாலிபர் சங்கம் ஸ்தாபிக்கபெற்றிருக்கிறது. இதுவரை பன்னிரண்டு அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கிறார்கள். என்று காரியதரிசி யெழுதுகிறார்.

### கண்டவராயன்பட்டி.

இவ்வூரில் தனவைசிய வாலிபர் சங்கத்திற்கு முப்பத்தொரு அங்கத்தினர்கள் இதுவரை சேர்ந்திருக்கிறார்கள். உச-உ கூட்டங்கூடி ஆவணி-மீ ௩-உ சங்கம் ஸ்தாபிக்கிறதென்று தீர்மானித்திருக்கிறார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

### சொக்கலிங்கம் புத்தூர்.

இவ்வூரில் ஆடி-மீ கஉஉ புதன்கிழமை பகல் உ-மணிக்கு தனவைசிய வாலிபர் சங்கஸ்தாபனம் செய்யப்பெற்று இதுவரை இருபது அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கிறார்கள் என்று காரியதரிசி ஸ்ரீமாந் பெ. ப. அ. பழநியப்ப செட்டியாரவர்கள் எழுதுகிறார்கள்.

### சொக்கநாதபுரம்.

இவ்வூரில் ஆடி-மீ க௩-உ மாலை ௫இ-மணிக்கு தனவைசிய வாலிபர் சங்கம் ஸ்தாபிக்கப்பெற்றது. ஸ்ரீமாந் அ. நா. அ. சாமிநாதன் செட்டியாரவர்களை அக்கிராசனராகவும் ஸ்ரீமான் ராம. கரு. ராம. ராமசாமிச் செட்டியாரவர்களைக் காரியதரிசியாகவும் தெரிந்தெடுத்திருக்கிறார்கள். இதுவரை பதினாறு அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கிறார்கள். என்று காரியதரிசி எழுதுகிறார்.

### கண்டதேவியில் தென்னாடு நாட்டுக்கூட்டம்:

ஆடிமீ உ௫உ கண்டதேவியில் தென்னாடு நாட்டு ஜனங்கள் ஒரு பெருங்கூட்டம்கூடியிருந்தனர். சுமார் அறுபதினாயிரம் ஜனங்கள் வந்திருந்தார்கள் என்று மதிக்கப் பெறுகிறது. அன்று தினம் தேவகோட்டையில் கடைகள் யாவும் மூடப்பெற்றிருந்தன. இக்கூட்டத்தில் "கள்ளுண்ணாதிருத்தல், களவு செய்யாதிருத்தல், கோர்ட்டுக்குப் போகாது விவகாரங்களைப் பஞ்சாயத்தில் தீர்த்துக் கொள்ளல்" இத்யாதி தீர்மானங்கள் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்களென்றும், உறுதியான தீர்மானம் செய்வதற்காக ஆவணிமீ க௦உ கூட்டம் கூடுமென்றும் தெரிகிறது.

ஒரு நிருபர்.

### கண்டனூர்.

ஆவணிமீ க, உ-தேதிகளில் இவ்வூர் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவர வாசக சாலையின் ஆறுவதாண்டு நிறைவுவிழா மகிபாலன்பட்டி பண்டிதர் ஸ்ரீமான் மு. கதிரேசச் செட்டியாரவர்களின் தலைமையில் நடைபெறும். பல அரியபெரிய உபந்யாசங்கள் நடைபெறும்.

### இராமச்சந்திரபுரம்.

(திருச்சினாப்பள்ளி)

காலஞ் சென்ற ஸ்ரீமாந் தீ. நா. நாச்சியப்ப செட்டியார் F. R. S. A. அவர்களுக்காக ஓர் அனுதாபக் கூட்டம்.

சென்ற ௫௨ வெள்ளிக்கிழமை மாலை எ-மணிக்கு இராமச்சந்திரபுரம் பிர்மவித்தியாம்பிகை இலவச வாசகசாலையில் மேற்படி யூர் தனவைசிய வாலிபர் சங்கச் சார்பில், காலஞ் சென்ற ஸ்ரீமான்கள் நாச்சியப்ப செட்டியார் F. R. S. A. அவர்களுக்காகவும், முருகப்ப செட்டியார் அவர்களுக்காகவும் ஓர் பொதுஜன அனுதாபக் கூட்டம் நடைபெற்றது. புதுக்கோட்டை டாக்டர் கே. நாராயணசுவாமி ஐயர் அக்கிராசனம்வகித்தார்.

கோனாப்பட்டு ஸ்ரீமாந் ராம. ஊ. ராம. இராமன் செட்டியாரவர்கள் காலஞ்சென்ற இருவருடைய தருமத்தையும் நற்குணங்களையும் குறித்து வெகு உணர்ச்சியுடன் வெங்கலக்கடையில் மதயானை புகுந்தாற்போல உபந்யசித்தார். இராமச்சந்திரபுரம் இலவச ஹைஸ்கூல் ஆக்டிங் எட்மாஸ்டர் ஸ்ரீமான் ஐயாசாமி ஐயர் காலஞ் சென்றவர்களின் தர்மச் சிறப்பைக் குறிப்பிட்டு அவற்றில் பிராம்மணர் முதல் பலரும்பங்குபெற்றிருப்பதால் இவ்விதம் பொதுஜன சபை கூடி எல்லோரும் அனுதாபங் கூறவேண்டியது கடமையே என்று பொருள்தோன்றப் பேசினார்.

தனவைசிய வாலிப சங்கக் காரியதரிசி ஸ்ரீ வசு. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்களால் ஒரு உருக்கமான பிரசங்கம் செய்யப்பட்டது. அதன்பின் காலஞ்சென்ற மேற்படிசெட்டியாரவர்களின் ஞாபகார்த்தமாகசிறிதுநேரம் மௌனம் சாதிக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு, அப்படியே சபையார்எல்லாரும் இரண்டு நிமிஷநேரம் பேச்சற்று அமர்ந்திருந்தனர். பின்னர் ஸ்ரீமான்கள் கோனாபட்டு கலாசாலை தமிழ் வித்துவான் எஸ். ஆழ்வார் ஐயங்கார், திரு. இராமசுவாமி ஐயங்கார், கே. கல்லையன், மு. மாணிக்கவாசகம் இவர்கள் தாங்கள் இயற்றிய சரமகவி இரங்கற்பா முதலியவைகளை மனமுருகப் பாடினார்கள். ஸ்ரீமான்கள் கோனாப்பட்டு மெ. மு. மு. பள. இராமன் செட்டியாரும், சு. பள. அழகப்பன் செட்டியாரும் உபந்யாசம் செய்தார்கள். ஸ்ரீமாந் எம். சாமிநாதன் சேர்வை தம் நன்றியறிதலைக் குறிப்பிட்டு ஓர் வியாசம் வாசித்தார்.

இந்தக் கூட்டத்தை ஆதரித்துப் பல விடங்களிலுமிருந்து கடிதங்கள் வந்திருந்தன. அவற்றுள் ஆனாயின் S. RM. MA. அண்ணாமலைச் செட்டியார், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள், சர்க்கரை இராமசாமிப்புலவர், வேதாரண்யம்உலகநாத பிள்ளை முதலியோரின் கடிதங்கள் வாசிக்கப்பட்டன.

காலஞ்சென்ற கனவான்களின் உருவப்படங்கள் இரண்டு இராமச்சந்திரபுரம் இலவச வாசகசாலையில் வைக்கடவேண்டுடுமென்று ஓர் தீர்மானம்பிரேரேபிக்கப்பட்டு சபையோரால் ஏகவாக்காய் நிறை வேற்றப்பட்டது.

கடைசியில் சபாநாயகர் மேற்படி இருவரின் குணாதிசயங்களையும் தருமங்களையும் பற்றிக்கூறி, அத்தகையோரின் மரணத்தைத் துக்கசம்பவமாகக்கருதாமல், அதைக் கலியாண சம்பவமாகக் கருதலே தகுதியென்றும் ஆனால் இவ்வாறு அநுதாபம் கூறுவது முதலியன உலக வழக்கத்தை அனுசரித்ததென்றும் பொருள்படச் சொற்பொலிவுடன் அக்கிராசனர் உரை கூறினார். சுமார் கூ௦-மணிக்கு சபை கலைந்தது.

நிருபர்.

### திருப்பத்தூர்.

நேற்றுகாலைமுதல் இவ்வூரில் கள்ளுக்கடை ஏலத்திற்காக ஏற்பாடு செய்யப்பெற்றன. அன்றுபூராவும் இன்று இதுவரையும் ஸ்ரீ ல ஸ்ரீ சுப்பிரமணியசிவம் அவர்களின் முயற்சியால் கூட்டம் கூட்டப்பட்டுக் கடைகள் பூராவும் சாத்தப்பட்டன. சுமார் கூ௦௦ ஜனங்களுக்கு மேல் கூடி ஸ்ரீலஸ்ரீ சிவம் அவர்களும் மற்றவர்களும் கட்குடித்தலை நிறுத்துவதின் பொருட்டு உபந்யசித்தார்கள். இரவுவரை ஒருவரும் ஏலங் கேட்கவுமில்லை. கேட்பதற்கு டிபாசிட் கட்டவுமில்லை. இரவு சுமர் அ, மணிக்குமேல் இருவர்வந்து ௩ரு டிபாசிட் கட்டிவிட்டார்கள். ஆயினும் இன்று கஉ மணிவரைஒருவரும் கேட்கவரவில்லை, க-மணிக்கு மேல் ஏலம் போடப்பட்டு டிபாசிட் இன்றி ஏலம்-கேட்கச்சொல்லப்பட்டது. மிகவும் குறைந்த தொகைக்குஅதாவதுஒன்றுக்கு அரைக்காலாக சுமார்௫௦கடைகள் ஏலம்கூறி விடப்பட்டன. மற்ற அ௦கடைகளும்ஏலம்முடியாமலிருக்கின்றன. கூட்டம் அமைதியாகவே நடந்துகொண்டிருக்கிறது.

கஉ—அ—உக மாலை ௫ மணி } கண்டுமகிழ்ந்தோன்.

## நமது பலசரக்குக்கடை.

அஞ்சா நெஞ்சன் எழுதுகிருர்:—

சிலர், "பெண்களுக்குப் படிப்பு உதவாது; படித்தால் கெட்டுப் போவார்கள்; உலக்கை மாதிரி யிருப்பதுதான் சரி" யென்று சொல்கிருர்கள். அவர்களுக்கு, நடந்த ஒரு கதையைச் சொலலுகிறேன். அதிலிருந்து படியாமையாலுள்ள சிரமத்தை யறிந்து கொள்ளட்டும்.

ஒருநாள் சாயங்காலம் ஐந்துமணியிருக்கலாம். நான் கடைவீதி வழியாகப் போய்க் கொண்டிருந்தேன். சுமார் முப்பதுவயதுள்ள ஒருபெண் வெகு வேகமாகவந்து, "இஞ்சே ஒங்களத்தானே! ஒரு கடலாசி எழுதிக் தருவிய இண்ணு கேக்க வந்தேன்" என்று சொன்னுர்கள்.

நான்:—சாயுங்காலமாயிற்று. காலையிலெழுதக்கூடாதோ?

பெண்:— ரெண்டே ரெண்டு வரி. விடிடீக்காலம் எழவுக்குப் போகவேணும்.

( இருவரும் ஷியார் வீட்டுக்குப் போனேம். )

நான்:—கடிதம் எழுதவேண்டியது யாருக்கு? எந்தவூருக்கு? என்ன தகவல்?

பெண்:—அவுகளுக்குத்தான். நொண்ணனுக்கும் பயலுக்கும்.

நான்:—அவர்கள் எந்தவூரிலிருக்கிருர்கள்?

பெண்:—லாக்காப்பிலிருக்கிருக. பயலும் அங்கதான் இருக்கான்.

(பயலும் தகப்பனும் ஏன் லாக்காப்பி (Lockup) லிருக்கிருர்கள்? என திகைத்துப்போனேன். பிறகு நிதானித்து அது ஒரு ஊராகத்தானிருக்குமென்றெண்ணி)

நான்:— நீங்கள் சொல்லுகிற ஊர் எனக்குத் தெரியவில்லையே? ரங்கூன் பக்கமா பினுங்குப்பக்கமா?

பெண்:—சுப்பஞ்செட்டி வீட்டு முத்துராமன்போயிருக்கானே அந்தப் பக்கம்.

நான்:—அவர் யார்? அவர்எந்தப்பக்கமாகப்போனுரென்றே யெனக்குத் தெரியாதே.

பெண்:— நண்ண மகமிண்டிக்கு அண்ணே ராமஞ்செட்டி யிருக்கானே அந்தப்பக்கந்தான்.

நான்.—சரி சரி; பினுங்குப்பக்கத்தில் மலாக்காவோ?

பெண்:—ஆமா ஆமா அந்தவூர் தான்.

நான்:—நல்ல காரியமாயிற்று. அது லாக்காப் அல்ல. மலாக்கா வென்பார்கள். இருக்கட்டும், விலாசந் தெரியுமா?

பெண்:—தெரியாது.

நான்:—விலாசந்தெரியாமல் எப்படி கடிதாசி யெழுதுவது?

பெண்:—ஒங்களுக்குத் தெரியுமிண்ணுதானே கூப்பிட்டேன்.

நான்:—எனக்கெப்படித் தெரியும். ஊரே தெரியவில்லையே விலாசமெப்படித்தெரியும்? வந்தகடதாசி ஏதாவதிருக்கிறதா?

பெண்:—ஆமா. இருக்கு. போனப்பிலே ஒரு கடலாசி வந்திச்சு.

என்று அடுக்குப் பெட்டியில் ஒரு பெட்டியைக்கொண்டு வந்து எனக்கு முன்னல் வைத்துத் திறந்தார்கள். அதிலிருந்து செவ்வண்டும் பாச்சையும் அந்துப்பூச்சியும் என் உடம்பு வேட்டி சட்டை எங்கும் ஓடித்தாவி மைத்துனன் முறை கொண்டாடி விளையாட ஆரம்பித்து விட்டன. அப்பெட்டிக்குள் சில செல்லரித்த ஓலைகளிருந்தன. ஆனல், கடிதாசி கிடையாது. வேறு பெட்டிகொண்டு வந்தார்கள். அதிலும் இத்யாதி வஸ்துக்களே யிருந்தன. பிறகு விளக்கேற்றிக்கொண்டு வீடெல்லாம் பிரித்தார்கள். அகப்படவில்லை. அதன் பிறகு பிள்ளை குப்பைமேட்டில்விளையாடிக்கொண்டிருந்த இடத்தில் போட்ட வெறுங்கூடொன்றை யெடுத்து வந்து மாடத்தில் வைத்து அதன்மேல் விளக்கு வைத்த ஞாபகம் வரவே ஓடி வந்து அதை யெடுத்துக்கொடுத்தார்கள். அந்தக் கூடு விளக்கெணணெயில் ஊறிப் போய் ஒன்றும் விளங்கவில்லை. மிகப் பிரயாசைப்பட்டு ஒருவாறுக மலாக்கா பேரி. சு. என்று ஒரு முகரிருப்பதை கண்டுபிடித்தேன். ஊரும் விலாசமும் கண்டுபிடிக்க இரவு மணி எட்டரையாகிவிட்டது. "நல்ல வேளை. காகிதம் மைக்கூடு பேனு கொண்டு வாருங்கள். எழுதி விடலாம்" என்றேன். "பேனுக்கடலாசி யெல்லாம் அவுகளங்கனேயோ வச்சிட்டுப்போயித்தக. மைக்கூடு மட்டுமிருக்கிறது" என்று சொல்லி காய்ந்துபோன ஒரு பீங்கான் மைக்கூட்டைக் கொண்டுவந்து என் முன்னலே வைத்தார்கள். (இந்தப் பெண்களை வைத்துக் கொண்டு சங்கதியைக் கூடச் சொல்லப்படாதாம். தெய்வமே! அன்றைய தினம் எனக்கிருந்த ஆத்திரம் எனக்குத் தெரியும்.) இனி இவர்களோடு பேசிப்பிரயோசனமில்லை யென்று கருதி பக்கத்து வீட்டிலுள்ள என் சிநேகிதனிடம் பேனவும் காகிதமும் கூடும் வாங்கி வந்து "சங்கதியைச்சொல்லுங்கள்" என்றேன். சொன்னுர்கள் எழுத ஆரம்பித்தேன். ஏழுபக்கமாயிற்று. இரண்டு வரி ஏழுபக்கமாயிற்று. விஷயங்களோ சொல்ல வேண்டியதில்லை. அத்தனையும் தனக்கும் மாமியாளுக்கும் நாத்தனுருக்கும் மறுமகளுக்குமுள்ள சண்டை. வேண்டிய சாமான்கள் மடக்கி மடக்கி எழுதி எனக்கும் புளித்துப்போய்விட்டது. கடிதமும் ஒருவாறுக கo-மணிக்கு எழுதி முடிந்தது. மேல் உரையில் விலாசத்தைப் போட்டுவிட்டேன். பெயரெழுத வேண்டும். பெயர் எனக்குந் தெரியாது. அவர்களும் சொல்லமாட்டார்கள் என்செய்வது? எனக்கு ஜோஸ்யமுந் தெரியாது. வேறு யாரையும் கேட்க அந்த வீட்டில் வேறே ஆள்கிடையாது. சாதாரணமாக "சாமியாடிச் செட்டியார்" என்று எல்லாரும் கூப்பிடுவது தெரியும். ஜாடையாகச் சொல்லுங்கள் என்றேன். குன்னக்குடிப் பேர் என்றுர்கள். எனக்குத் தெரிந்த வரையில் நம்மவர்கள் வைத்தழைக்கிற எல்லாப் பெயர்களையும் சொல்லிக்கேட்டேன். அத்தனையும் இல்லையென்று சொல்லி விட்டார்கள். இன்னும் ஏதாவது ஜாடை காட்டுங்கள் என்றேன். அடுப்படியிலிருந்த ஒரு கரித்துணியைக் கொண்டுவந்து என் முன்னலே வைத்து இரண்டு கையையுந் தூக்கிக் கும்பிட்டார்கள், இப்போது என்னுடைய மூளை வேலைசெய்ய ஆரம்பித்தது. கரித்துணிக்கு என்னென்ன பேருண்டு என்று தெரிந்து, நமஸ்காரத்துக்கு அர்த்தங்கண்டு பொருத்தி ஒரு சுப்பிரமணியருடைய பெயராக்க வேண்டும். பெரிய வேலைதான். கடைசியாக "கந்தசாமி" யாக இருக்கலாமோ வென்றேன். "ஆமா ஆமா அதுதான் அதுதான் என்றுர்கள். விஷயம் முடிந்தது. இதை நமது நண்பர்கள் வரிவரியாகப் பல முறை படித்துப் பெண்கல்வி யவசியமில்லையா வென்று தீர்மானிக்கவேண்டும்.

## தனவைசிய ஊழியன்.
### சந்தா விபரம்.

| | |
|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷ ஒன்றுக்கு ... | ௩—0—0 |
| சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்குவருஷஒன்றுக்கு | ௬—0—0 |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | 0—௧—௬ |

### விளம்பர விபரம்.

| | |
|---|---|
| மாதம் ௧-க்குபத்தி-௧-க்கு ... | ௨0—0—0 |
| ௸ அரைபத்திக்கு... | ௧௧—0—0 |

தனவைசிய ஊழியன் ஆபீஸ்,

மானேஜர், காரைக்குடி.





சொ முருகப்பசெட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப் பிரசுரஞ் செய்யப்பெற்றது.



# முதலாவது தனவைசிய வாலிபர் மகாநாடு.

அக்ராசனர்

## ஸ்ரீமாந். சொ. முருகப்ப செட்டியார் அவர்களின்

முகவுரைப் பிரஸங்கம்.

——(o)——

சகோதரர்களே ! தாய்மார்களே ! சகோதரிகளே !

கடல்சூழ்ந்த இக்காசினியில் மக்கள் ஒவ்வொருவரும் கவலையற்றுக் கஷ்டமற்று இடிப்பற்று இன்பமயமான சுகவாழ்வு வாழவேண்டு மென்றுதான் விரும்புகின்றனர். முயல்கின்றனர். இம்மாதிரியான வாழ்க்கை வாழ்பவரே புண்ணிய சாலிகளென்று கூறப்பெறுவர். இந்த வாழ்க்கையில் சர்வ சாதாரணமாக நமது நாட்டில் நமது முன்னோர்கள் வாழ்ந்திருந்தார்கள். சில நூற்றாண்டுகட்கு முன்னர், நமது தேசத்தில் பஞ்சமும் பிணியும் பயமுந் தலைவிரித்தாடவில்லை. டம்பமும்அகங்காரமும்வஞ்சமும் பொறாமையும் மலிந்திருக்கவில்லை. குடி முதலியபஞ்சமகாபாதகங்களைச்செய்வோர் தொகை பெருகவில்லை. சத்தியமும் தைரியமும் உண்மையும் தெய்வ பக்தியும் அடக்கமும்ஜ்வலித்தன. முற்றத்துறந்தசந்யாசிகளும், உலகத்தில் தர்மத்தை நிலைநாட்டக்கூடியபிராஹ்மணர்களும் வெற்றி வீரர்களான அரசர்களும், தன்மதிப்பும் பெருந்தன்மையுமுடைய வியாபாரிகளும், அருமையான தொழிலாளர்களுமே நமது நாட்டில் நிறைந்திருந்தார்கள். மகான்களுக்கும் பெரியோருக்கும் மதிப்பிருந்தது. ஒவ்வொருவ நம் தம் தேசத்தாரின் மானம்-தன் ஜாதியாரின் மானம்பெரிதென்றுகருதினார்கள். ஒவ்வொருவரும் இவற்றின் பொருட்டுத் தங்கள் உயிரையும் தியாகஞ் செய்யக்காத்திருந்தார்கள். தாங்கள் பட்டினியிருந்தாலும் உயர்ந்த கௌரவமான தொழில் புரிவதேயன்றி இழிவான தொழிலைச் செய்ய முன் வரவில்லை. சிறுசெய்கையிலும் தெய்வமணங்கமழும். உண்மையும் கம்பீரமும் விளங்கும். முற்காலத்தில் நமது நாட்டில் பஞ்சமின்றி யாவரும் சுகமாக உண்டுவாழ்ந்தார்கள். விளைபொருள்கள் பணத்திற்கு அடிமையாக்கப்படவில்லை. ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளை வாங்கும் பண்டமாற்று முறையேயிருந்தபடியால் எப்படியாவது ஒருதொழிலை ஒருவன் பற்றியிருக்கவேண்டியிருந்தது. ஒருவன் அபிவிருத்தியாக வேண்டு மென்றால், அதிகமான தொழிலைச் செய்தே தீரவேண்டியிருந்தது. அனாவசியமான சாமான்கள் வீணுக டம்பத்தின் பொருட்டுச் செய்யப்படவில்லை. எந்தப் பொருள் இன்றியமையாததோ அந்தப் பொருள்தான் செய்யப்பட்டது. எங்கு சென்றாலும் விளைபொருள்கள் செயற்கைப் பொருள்களைப் பற்றி வியவகாரமேயன்றிப் பணத்தைப்பற்றிப் பேச்சே கிடையாது. பணத்தைச் சேர்த்துப் பாங்கிகளில் வட்டிக்குப் போடுகிற முறையில்லாதபடியால் இயற்கையும் செயற்கையுமான பொருள்கள் மலிந்து கிடந்தன. நமது நாட்டினருக்குத் "தன் கையே தனக்குதவி" யாயிருந்தது. எந்தப் பொருளுக்காகவும வேறு எதற்காகவும் மற்ற நாட்டார் நமது நாட்டை விரும்பினார்களேயன்றி நமது நாட்டார் பிற நாட்டின் உதவியை விரும்பி நிற்கவில்லை. குடியும் கொலையும் பொய்யும் புரட்டும் தீய ஒழுக்கங்களும் இல்லாதபடியால் பகைமையும் வேற்றுமையும் கஷ்டமும் விலகிநின்றன. ஒற்றுமையிருந்திருந்ததோடு பஞ்சாயத்து முறையிருந்தபடியால் வியவகாரக் கோர்ட்டுகளும் வக்கீல்களும் இருந்து தன் புறத்த இடமில்லை. இத்தகைய நாட்டில் பிறந்தவர்கள் நாம் என்பதை இப்போது கம்பீரமாகச் சொல்லிக் கொள்ளச் சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. இத்தகைய பெருமை வாய்ந்த இந்திய நாட்டிற் பிறந்த நம் முன்னோர்கள், மகா மேதாவிகளாய் வியாபாரதந்திரங்களை இனிதுணர்ந்து பெரும் பொருளைக் காணிகாணியாக ஈட்டித் தர்ம மார்க்கத்தில் கோடி கோடியாகச் செலவிட்டுப் புகழும் புண்ணியமும் தேடி யிருக்கிறார்கள். அவர்கள் போட்டு வைத்திருக்கிற அஸ்வாரத்திலேயே நமது சமூகம் இன்றும் விளங்குகிறது. நமது நாட்டிலுள்ள பல வகுப்பார் தங்கள் நெறியினின்றும் விலகியிருந்த போதிலும், நாம் புராதன வழியைவிட்டு முற்றும் விலகி விடவில்லை. மானம் பேணி உயிர்துறந்த மாண்பாளர் பிறந்த நமது சமூகத்தை உலகிலுள்ள ஏனைய சமூகத்தின் முன்னணியில் நிறுத்தும் முயற்சியில் தீவிரமாக வேலை செய்யப் பின்வாங்கமாட்டோம். நமது குலம் பரிசுத்தமானது. அற்பக் குற்றமும் செய்யாத உத்தம குலத்திற் பிறந்திருக்கிறோம். குற்றம் புரிந்து ராஜ தண்டனைக்குட்பட்டவரை சமூகத்திலேயே சேர்த்துக் கொள்வதில்லையென்று தீர்மானித்து நடந்து வருவதனாலேயே "இந்த சமூகத்தாரிடம் குற்றமென்பதே தலைகாட்ட முடியாது" என்பது விளங்குமன்றோ ? குற்றம் புரிபவர் சமூகத்திலிருத்தல் கூடாது என்று விலக்கப்பட்டு விட்டபடியால் நமது சமூகத்திலுள்ள அத்தனை பெயரும் பரிசுத்த முடையவர்கள் என்பது இனிது விளங்கும். நமது

ஸ்ரீமான் சோ. முருகப்ப செட்டியார்.

நாடு தொழிலில் மேன்மை பெற்றுச் செல்வத்தில் சிறப்புற்றிருந்த காலத்தில் நம்மவர்களும் பலபொருள்களையும் கொண்டு சென்று உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் வியாபாரம் செய்து வாழ்ந்தனர். சில நூற்றாண்டுகளாக அந்நியர் வசத்தில் வியாபாரம் ஒப்புவிக்கப் பெற்றுத் தொழில்களும் அழிக்கப்பட்டுப்போனபின்னர் காலத்தை யநுசரித்து வட்டித் தொழிலைக் கைப்பற்ற வேண்டி நேர்ந்துவிட்டது. அந்நிய நாடுகளில் செய்யப்பட்டு இங்குவந்து நமது ஜனங்களின் ரத்தத்தை யுறிஞ்சிக் கொண்டுபோகும் பொருள்களில் இடையிற் சிந்துகிற துளிகளைச் சுவைத்து வியாபாரம் செய்வதைவிட வெளிநாடுகளில் கப்பலேறிச் சென்று அந்நியநாட்டாரிடம் வட்டித்தொழில்செய்து கிடைக்கும் பொருள்களைக்கொண்டுவந்து வாழலாம் என்றுகருதி, இத்தொழில் நம்மவரால் கையாளப்படுகிறது. அப்படி ஈட்டிய பொருள்களைக்கொண்டுவந்து நமதுதேசத்தில் பலவகையான தருமத்தைச்செய்துவருகிறோம். பெரும்பாலாக எந்தேசத்திற்குச் சென்றாலும் இந்தியர்களுக்கு மற்றராஜாங்கத்து ஜனங்களைப்போன்ற சுதந்தரங்கள் இல்லாதபடியால் அதனால் ஏற்படும் துன்பங்களையும் தனிமைபாற்றல் முதலிய பல கஷ்டங்களையும் சகித்துக்கொண்டு வெளிநாடுகளில் தொழில்செய்து பொருளீட்டிவருகிறோம். நமது சமூகத்தாருக்குப்படிப்பில்லையென்று பலர் கூறுகின்றனர். படிப்பென்பது கேவலம் ஏடுகளைப் படிப்பதுமாத்திரமன்று; ஆங்கிலக் கலாசாலைகளிற்சென்று அறிவுள்ள மனிதன் யந்திரமாகிவிடுவதன்று; தன் உணர்ச்சியும் ஒழுக்கமும் தெய்வபக்தியும் தேசாபிமானமும் உண்டாகுமாறு படிப்பதே படிப்பாகும். ஆங்கிலக்கலாசாலையில் பி.ஏ. பட்டம் பெற்றவர் எந்தவிதத்திலும் நம்மைவிடச்சிறந்துநிற்கிறாரென்று சொல்லமுடியவில்லை. ஆங்கிலக் கல்வியையறியாத நம்மவரைப்போன்ற தொழிற்பழக்கமும் சம்பாத்தியத்திறமையும் தொழிலிற் காட்டும் தைரியமும் கஷ்டமுற்றுச்சம்பாதித்த பொருள்களைச் சீரியவழிகளில் செலவிடும் தன்மையும் ஆங்கிலம் படித்துப் பட்டம்பெற்றவர்க்கு வருவதில்லை. ஆனால் நமது சமூகத்தார் கூடியவரை தமிழ்க்கல்வியைக் கற்றுவருவதோடு, ஆங்கிலக்கல்வியும் தற்காலத்தில் அவசியமாகவேயிருப்பதால், பாஷாஞான முண்டாகும்படி அதாவது எழுதவும் பேசவும் தெரிந்துகொள்ளும்வரை படிக்க அவசியமேயாகும்.

நமது தேசமானது பல்வழியிலும் முன்னிருந்தபெருமையை இழந்து நிற்குமிந்நாளில்-ஜனங்களிற் பெரும்பாலார் உண்ண உணவுமின்றிக் கஷ்டமுறும் இந்நாளில்-பெரிய பெரிய தொழில்களை விரும்பாமல் இந்தியநாட்டிலேயே இருந்துகொண்டு இந்தியர் பணத்தைப்பிடுங்கி ஐரோப்பா முதலிய வெளிநாடுகளுக்கு கொடுத்துப்பலர் வாழுமிந்நாளில்—ஆஸ்திகம்குன்றி நாஸ்திகம் பலமடைந்து சத்யமும் தர்மமும்குன்றிப் பொய்மையையும் அதர்மமும் தலைதூக்கப் பார்க்குமிந்நாளில் நமது சமூகமானது புராதனப்பெருமைகளின் சாயைபோடுபழைய அஸ்திவாரத்திலேயே நின்று விளங்குவது நமது பாக்கியமேயாகும். இந்தியநாட்டினர்புராதனகாலந்தொட்டுப் பல வகுப்பினர்களாகப் (ஜாதி) பிரிக்கப்பட்டுத் தங்கள் தங்கள் கூட்டங்களைச்சீர்திருத்தித் தங்கள்தங்கள் தொழில்களையும் சீர்திருத்திக்கொண்டு தங்கட்கு வேண்டிய நலன்களை அரசினரிடத்தில் பெற்று இன்பவாழ்கை வாழ்ந்துவந்தனர். ஒவ்வொருவகுப்பாரும் தனித்தனித்தொழிலும் தனித்தனி மதிப்பும் கொண்டிருந்தார்கள். அவர்கட்குள் ஒற்றுமையிருந்தது. தன்னம்பிக்கையிருந்தது. தைரியமிருந்தது. ஆண்மையிருந்தது. பொதுக்காரியங்களில் யாவரும் ஒற்றுமையாகவேயிருந்தார்கள். பிற உயர்குணங்களுமிருந்தபடியால் வகுப்பு வகுப்பாகப் பிரிந்திருந்தபோதிலும் பொதுவாழ்க்கைக்கு இடையூறு ஏற்படவில்லை. ஒவ்வொரு தொழில் ஒவ்வொரு நோக்கத்தைப்பற்றித் தற்காலத்தில் சங்கங்களேற்படுவதைப்போலவே ஒவ்வொரு தொழிலுடையவரும் ஒவ்வொரு நோக்கமுடையவருமான பலர் சேர்ந்து ஒவ்வொரு கூட்டமாக வாழ்ந்திருந்தனர். தற்போது எங்கும் ஏழ்மையும் வேற்றுமையும் உண்டாக்கப்படவே அசூயையும் பயமும் சுயநலமும் உண்டாகி ஜனங்கள் கஷ்டமுறுகிறார்கள். ஒவ்வொரு வகுப்பாரும் "நான் பெரியவன்" "நான் உயர்ந்தவன்" "என் குலமுயர்ந்தது" "உன்குலந்தாழ்ந்தது" "என் பாட்டன் வானத்தை வில்லாகவளைத்தான்" "உன்பாட்டன்வளைக்கவில்லை" யென்று தற்காலத்திற்குக் கஷ்டத்தையுண்டாக்கும்விதமாகச் சண்டையிட்டுத் துன்புறுகின்றனர். வீண் விவாதங்களால் மனஸ்தாபங்களும் பல துன்பங்களுமுண்டாகி விடுகின்றன. ஆனால் இந்த வேற்றுமை மற்ற தேசங்களில் வேறுவிதமாயிருக்கிறது. பொருளுள்ளவன் பெரியவன். இல்லாதவன் உலகத்திற்கூட இருக்க யோக்கியதையற்றவன்; என்ற எண்ணமிருக்கிறது. அம்முறையைக்காட்டிலும்பரம்பரையில் குலத்திலுயர்ந்தவனாக இருப்பதைப் பாராட்டிக்கொள்வதை நாம் மிகப்பாராட்டிக்கொள்ளலாம். ஆனால் நமது குலப்பெருமையைப்பேசிக்கொள்ளும்போது நாமிருக்கும் நிலைமையைக் கவனித்துத் திருத்திக்கொண்டால்தான் நமது பெருமையை நமது குழந்தைகள் கொண்டாடமுடியும். வெறும் வாயினால் மாத்திரம் புராதனப்பெருமையைப் பேசிவிட்டுத் தான்பெருமையான காரியங்களைச் செய்யாதிருப்பானானால் அவனுக்கு மதிப்புக்கிடைப்பது துர்லபமேயாகும். மேலும்முன்னோர் வாழ்க்கைமுறைகளிலுள்ள பெருந்தன்மையான விஷயங்களையும் உலகோபகாரமான விஷயங்களையும் காப்பாற்றவே மக்கள் பிறக்கின்றனர். புராதன காலத்தில் இந்திய நாடெப்படி யிருந்தது? தற்கால மெப்படி யிருக்கிறது? நாமெப்படி நடக்க வேண்டும்? என்பதைக் கவனித்து நடக்கவேண்டும். "புராதன காலம் சிறந்திருந்ததுஎன்பதற்காகப்பழைய வழக்கங்களை-தற்காலத்தில்உபயோகமற்ற-சில வழக்கங்களைப் பிடித்துப் பல்லைக் கடித்துக்கொண்டு அநுமார் வேஷம் போடக்கூடாது. அதற்காகத் தற்காலவழக்கங்களில் உபயோகமற்றவைகளைக் கைக்கொண்டு விடவும்கூடாது. இரண்டையும் கலந்து யோஜித்து உபயோகமுள்ள யாவற்றையும் அநுபவத்திற் கைக்கொள்ள வேண்டும். இந்திய தேசத்தில் வாழும் நான்கு வகுப்பினரில்வைசிய வகுப்பு ஒன்றாகும். அதிலும் பூவைசியர் கோவைசியர் தனவைசியர் என்ற மூன்று பிரிவில் நாம் தனவைசிய வகுப்பினராவோம். தெய்வபக்தியிற் சிறந்து உலகாளுந் தொழிலில் மேம்பட்டு உலகமுண்டான காலந்தொட்டு அரசு புரிந்த சேர சோழ பாண்டியர்களால் தெய்வ மணங்கமழ ஆட்சிபுரிந்திருந்ததமிழ் நாட்டிற் பிறந்திருக்கிறோம். அப்பர் சுந்தரர் சம்பந்தர் மணிவாசகர் ஆழ்வாராதியர் தெய்வமொன்றே மனிதன் அடையத்தக்க பொருளென்று அங்கை நெல்லிக்கனி போல அநுபவித்துக் காட்டிய பெரியார்கள் தெய்வ வாழ்க்கை வாழ்ந்துஉய்வித்த, தமிழ்நாட்டிற் பிறந்திருக்கிறோம். பட்டினத்தார் பத்திரகிரியார் முதலிய உள்ளத்துறவிகளையீன்ற தமிழ் நாடு; திருவள்ளுவரும் கம்பரும் ஔவையும் நக்கீரரும் வாழ்ந்து தமிழ் பொழிந்த இன்பவளநாடு. இறைவனும் அம்மையும் கந்தக்கடவுளும் ஆட்சிபுரிந்த புண்ணிய நாட்டிற் பிறந்திருக்கிறோம். இந்நாட்டிற் பிறந்த புண்ணிய சீலரான நமது முன்னோர்கள் வாழ்ந்த வாழ்க்கை மிக இனிமையுடையதாக விருந்தது. இரண்டு நூற்றாண்டாகவே நமது சுகவாழ்வில் துன்பம் உண்டாக ஆரம்பித்ததென்றாலும் சுமார் அறுபது வருஷத்துக்கு முன்னால் நமது சமூகம் ஒருவாறு நல்ல நிலைமையில்தான் இருந்தது. அதன் பின்னர் தான் மிகுந்த கஷ்டமடைந்துவிட்டது. அறுபது வருஷங்கட்கு முன்



னிருந்த நமது குலப்பெரியோர் தொன்றுதொட்ட இந்திய நாட்டு முறைகளைத் தமது வாழ்க்கையில் வைத்திருந்தார்கள். வகைக்கு வகை கூட்டங்களும்,உள்ளூர்ப்பங்காளிகள் கூட்டங்களும், ஊர்க்கூட்டங்களும் கோவில்வாசல்கூட்டங்களும்,மடத்து வாசல்கூட்டங்களும், இத்தனைக்கும் மேலாகத் தொண்ணூற்றாறூர்க் கூட்டமும் மிகக் கட்டுப்பாடாக இருந்தன. இக்கூட்டங்களுக்குத்தப்பி யோடிப்பிழைக்கவும்வழியின்றியிருந்தது. இடுக்கிப்பேசுவாரும் வீண் வழக்குப்பேசுவாரும் அக்கிரமஞ்செய்வோரும் புரட்டுசெய்வோரும் வாழமுடியாது. வம்பும் வழக்கு முண்டாகிப் பகைமையும் உண்டாகிப் பலமனிதர்கள் அழிவதற்குக் காரணமான சிவில் கோர்ட்டுகளும் மெய்யைப் பொய்யாகப் புரட்டும் வக்கீல்களும் தேவையின்றியிருந்தது. நமதுசமூகத்தார் இந்திய நாட்டின்வழக்கமாகிய பஞ்சாயத்து முறையைப் பலமாகக் கைக்கொண்டிருந்தார்கள். அம்முறையானது பலமாகமீண்டும் எப்போது கையாளப்படுகிறதோ அப்போதுதான் நமது சமூகமும் நமது நாடும் முன்னுக்குவரமுடியும். சண்டையும்வேற்றுமையும்ஒழியும். செல்வம் மலியும். ஒருசமூகம் முன்னேறி நின்று கஷ்டமற்று வாழவேண்டுமானால், ஒற்றுமையும் பரஸ்பரம் சகிப்புள்ள-கலந்த-துன்பமற்ற-வாழ்க்கையும் அவசியமாகும். நம்மிடமிருந்த சமூகாபிவிருத்திக்குரிய பலகுணங்களும் நமது ஒற்றுமையும் ஜாதியபிமானமும தன்னம்பிக்கையும் வாழ்க்கையின் இன்பமும் பிறர் நம்மிடம் வைத்திருந்த மதிப்பும் தொண்ணூற்றாறூர்க் கூட்டம் நின்ற தினத்திலிருந்து கொஞ்சம்கொஞ்சமாகக் குறைந்துகொண்டே வந்திருக்கின்றன. ஒரு சமூகத்தின் அபிவிருத்திக்கு முதற்காரணமாகவுள்ள விவாகவிஷயம் சகிக்க முடியாத துன்பத்தையுண்டாக்க ஆரம்பித்து விட்டது. பெண்ணுக்குப் பணம் வாங்குவது சர்வசாதாரணமாக,"அதுஒருகேவலமல்ல" என்று துணிந்து சொல்லும்படியான காலமும் வந்தது. அந்தப் பொருளைக்கொண்டு ஜீவனம் செய்ய வேண்டியிருக்கிறதென்று வெட்கமற்றுச் சொல்லவும் பலர் முன் வந்தனர். உண்மையாளரும் தெய்வ பக்தியுள்ளோரும் கடவுளைப் பார்த்துத், "தெய்வமே!ஒப்புயர்வற்ற உத்தம வாழ்க்கை வாழ்ந்துவந்த எங்கள் சமூகம் இந்த நிலையிலுமிருக்கவேண்டுமா?" வென்று கண்ணீருகுத்தனர். ஆயிரமாயிரம வாலிபர் கலியாணமின்றிக் கண்ணீர் வடித்தனர். உத்தமர்களுடைய மனதிலெண்ணுகிற காரியம் ஒருநாளும் வீணாவதில்லை. சுமார் இரண்டு வருஷங்கட்கு முன்னர் தனவைசிய ஊழியர் சங்கம் காரைக்குடியில் ஸ்தாபிக்கப் பெற்றது. ஜனங்களும் பக்குவமாயிருந்தனர். காலமும் சரியாயிருந்தது. ஒவ்வொருநாளும் அதற்கு முட்டுக்கட்டையாகப்பலர்நிற்கமுயன்றாலும், பல உத்தமர்களுடைய உதவியாலும் பெரியோர் ஆசீர்வாதத்தாலும் மரகதவிநாயகர் திருவருளாலும் அந்தச்சங்கத்தின நடையை ஊக்கம் குறையாது தீவிரமான வேலைகள் நடந்தே வந்தன. நம்மினத்தவர் செய்த தர்மம் தலைகாத்தது. ஆனி-மீ ௩௪-௨ கோவிலூரில் எந்தவிதமான அபிப்பிராய பேதமுமின்றிக் கூட்டம் இரண்டுநாள் நடைபெற்றுத்தீர்மானங்களும் செய்யப் பெற்றிருக்கின்றன. அதில் முதலாவதும் முக்கியமானதுமான தீர்மானம் "பெண்ணுக்குப் பணம் வாங்குவதில்லை. செலவுக்காக ரூ ௫000 கொடுக்கலாம்" என்பது. பெண்ணைப் பெற்றவர் ஒரு மாப்பிள்ளையைப் பார்த்துக்கல்யாணம்செய்ய வேண்டியது முறையாகும். நமது சமூகம் இன்றிருக்கிற நிலையில் குறைந்தபக்ஷம் கலியாணச் செலவு ரூபாய் ௫000 செல்லுமாதலால், அச்செலவு இன்னும் குறைவடைகிறவரையில் இந்த ஐயாயிரம் ரூபாய்ச் செலவையும் மாப்பிள்ளை வீட்டாரே கொடுக்கலாமென்று நகரத்தார் அபிப்பிராயப்பட்டது நியாயமேயாயினும், இந்தத் தீர்மானத்தைப்பற்றிப் பலர் பலவிதமாகக் கூறுகிறார்கள். இரண்டொருவர் "இத்தீர்மானம் நிலைத்து நிற்கமாட்டாது; கட்டுப்பாடற்ற சமூகத்தில் தாராளமாக வாங்கிவந்த வழக்கத்தை நிறுத்துவதென்றால் முடியவே முடியாது; எப்படியும் இத்தீர்மானம் கலைந்தே போய்விடும்" என்று கூறுகிறார்கள். நெடுநாளாக ஜனங்கள் இவ்வழக்கத்தால் கஷ்டப்பட்டு "எப்படித்தொலைப்ப"தென்று கவலைகொண்டிருந்தார்கள். இவ்விஷயமாகக் கூடிப்பேச வேண்டுமென்று முயற்சி செய்யப்பட்டவுடன் ஒருமணிநேரத்தில் ஆறாயிரம் பேர் கூடிவிட்டார்கள். ஒற்றுமையுள்ள நாளில் மாதக்கணக்காக நடைபெறுகிற கூட்டமானது, ஒற்றுமையில்லாத நாளென்று கூறுகிற இந்நாளில், ஒரு மணி நேரத்தில் கூடிவிட்டது. சிறு விஷயத்தில் நூறுகட்சி பேசுகிற காலமென்று சொல்லுகிறஇக்காலத்தில், அபிப்பிராய பேதமே வராமல் கூட்டம்நடைபெற்றது. இதனாலேயே ஜனங்கள் பரம திருப்தியாக இருக்கிறார்களென்பது விளங்குகிறது. பலரும் ஏகமனதாகச் செய்கிற காரியம் ஒருநாளும் உலைவுபடாது. அதில் ஏதாவது குழப்பம் செய்ய இரண்டொருவர் முற்பட்டால், ஜாதியில் அபிமானமுள்ளவர் வெறுமே யிருத்தல் கூடாது. முன்வந்து தீர்மானத்தைக் காப்பாற்ற வேண்டும். நம்முடைய சமூகம் கௌரவமாக வாழவேண்டுமானால்--சிதைந்து போகாதிருக்க வேண்டுமானால்-இந்தத் தீர்மானம் உறுதியாக நடைபெற வேண்டும். இப்போது கூடிய கூட்டத்திற்கு மதிப்பிருந்தால் தான், மேலும் மேலும் கூட்டியோ குறைத்தே தீர்மானங்கள் செய்து ஒற்றுமையடைந்து பலர் மெச்சும்படியாகவும் கஷ்டமின்றியும் வாழ வழியுண்டு. இதையழித்துவிட்டால் நல்ல வாழ்க்கை வாழ வழியே கிடையாது. பிறகு, இந்த சமூகத்திலிருந்து வீணைக் கஷ்டமுறப் பலர் இசையமாட்டார்கள். சமூகம் சிதைவுபட நேரும். ஆதலால், சமூகத்தில் அபிமானமுடையோர் யாவரும், வீண் கலகக்காரர்கள் இருந்தால் அவர்களைச் சாந்தப்படுத்தும் முயற்சியில் தலையிட்டுத் தீர்மானத்தை உறுதிப்படுத்த வேண்டும். இந்த முயற்சி நமது சமூகத்திற் பிறந்த ஒவ்வொருவரும் செய்ய வேண்டும். பணக்காரர்கள் தங்கள் செல்வாக்கைத் தீர்மானம் உறுதிப்படுகிற வழிகளில் உபயோகப்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். "பணக்காரர்கள் மனைவியைப் பிடிக்காமலோ அல்லது வேறுகாரணத்தாலோமறுதாரம் செய்ய விரும்பும்போது ஏராளமான பணத்தைக் கொடுக்க முன் வருவதால்தான்தொகை ஜாஸ்திப்பட்டது. இப்போதும் அவர்கள் தேவையை முன்னிட்டுத் தீர்மானத்தை மீறுவார்கள். கண்டிக்கப் புகுந்தால் கட்சி திரட்டுவார்கள்" என்று பலர் அபிப்பிராயப் படுகிறார்கள். இந்த அபிப்பிராயம் ஜனங்களினிடையில் மாறி "பணக்காரர்தான் இந்தத்தீர்மானத்தை நிலைக்கச் செய்தார்கள்" என்ற பேருண்டாகுமாறு பணக்காரர் நடந்துகொள்ளவேண்டும். இந்தத் தீர்மானத்தை யழித்துக் கூட்டத்தின மதிப்பைக் கெடுப்பதைவிடப் பாபமானகாரியம் வேறொன்றில்லை. தீர்மானத்தை யுறுதிப்படுத்தும் விஷயத்தில் நமது பெண்கள் மிகுதியும் சிரத்தைகொள்வார்கள். ஏனென்றால் நமது பெண்மக்கள் தெய்வ பக்தியில் மிகுந்த அபிமானமுள்ளவர்கள். மிகுந்தஇரக்கமுள்ளவர்கள். அன்பிற்சிறந்தவர்கள். யாரும் அநியாயஞ்செய்தால் அதனைப் புறக்கணித்துப் பேசுவதில் பயமில்லாதவர்கள். சொல்லுமுன் நியாயத்தை புணர்ந்து கொள்ளும் புத்திசாதுர்யமுடையவர்கள். அவர்கள் கையில் தான் நமது சமூகம் இருக்கிறது. அவர்கள் பார்த்து எப்படியும் திருப்பலாம். புருஷர்களாகிய நாம் எந்தக் காரியத்தை யெப்படிச் செய்தாலும் நமதுசமூகத்தில்சீர்திருத்தம் செய்ய வரும்போது பெண்களின் அபிப்பிராயத்துக்குத்தான் பெரும்பாலாக வர வேண்டியிருக்கும். விவாகம் முத

லிய விசேஷங்களில் சீர் கொடுப்பது ஸ்ரீதனம்கொடுப்பது முதலிய முறைகள் கொடுப்பது வாங்குவது ஆகியயாவும் பெண்களின் சம்மதத்தில் தான் இருக்கின்றன. அப்படியே பெண்ணுக்குப்பணம் வாங்குவது முதலிய குடும்பசம்பந்தமான சகலமும் பெண்கள் கையிலேயே யிருக்கின்றன. நமது பெண்களிடம் உயர்ந்த குணங்கள் பல விருப்பதாலும் தொண்ணூற்றாறூர் நகரத்தார் தீர்மானத்தை வேதவாக்காகவே நமது பெண்கள் நினைத்திருக்கிறபடியாலும் தீர்மானம் ஒருநாளும் நழுவாதென்று நாம் நம்ப இடமிருக்கிறது யாராவது இரண்டொரு புருஷர்கள் தீர்மானத்திற்கு விரோதமாக நடக்க முயன்றால், பெண்கள் முன்னின்று தடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

முன்பணம்வாங்காத சத்யாக்ரஹம்.

இந்தத் தீர்மான விஷயமாக வாலிபர் சங்கத்தாருக்கு மிகுந்த பொறுப்பிருக்கிறது. இந்த சமூகத்தில் இருந்து எதிர் காலத்தில் வாழவேண்டியவர்கள் வாலிபர்களேயாவர். இன்பமோ துன்பமோ எது வந்த போதிலும் அது இப்போது வாலிபராயிருப்போர் தலையில்தான் வந்து சேரப்போகிறது. "இப்போதிருக்கிற வாலிபர்களது முப்பாட்டன் காலத்தில் பெண்ணுக்குப்பணம் வாங்குவதில்லை. பாட்டன் காலத்தில் நானூறு முந்நூறு. தகப்பன்காலமாகிய தற்காலத்தில் முப்பதினாயிரம்" என்றுபெருகியிருக்கிறது. இனிவாலிபராகிய நாம் பிள்ளைகட்கு விவாகம் செய்கிறகாலத்தில் எத்தனையாகுமென்று யோஜித்துப்பாருங்கள். நம்மால் வாழமுடியுமா? இப்போதே இரண்டாயிரம்பேர்கள் விவாகமில்லாதிருக்கிறார்கள். இந்தத் தீர்மானத்தை உறுதிப்படுத்தினாலன்றி எதிர்காலத்தில் வாலிபர்கள் வாழ்வை ஒழுங்காக நடத்தமாட்டாமில்லை. இத்தீர்மானத்திற்கு யாராவது இடையூறு செய்ய முற்படுவார்களானால், அவர்கள அவ்வாறு செய்யாதிருக்குமாறு வாலிபர்களே முன்னிற்கவேண்டும். இதுதான்வாலிபர்சங்கத்தார் செய்ய வேண்டிய முதல் வேலையாகும். இதற்குமேல் கலியாணகாலச் செலவையும் சீர் முறைகளையும் மற்றும் ஒருவருக்கொருவர் கொடுத்துவாங்கிக்கொள்ளும் வழக்கங்களையும் வரைப்படுத்துவதற்குப் பெருமுயற்சிகள் செய்யப்படவேண்டும். விவாகம் முதலிய விசேஷகாலங்களில் நடைபெறும் சடங்குமுறைகள் பலவற்றையும் ஆராய்ந்து அநாவசியமாகவும் சாஸ்திரசம்மதமில்லாதனவுமான பல சடங்குகளை நிறுத்தவும் திருத்தக்கூடியவைகளைத் திருத்தவும் முயலவேண்டும். எந்தவிதத்திலும் நமது சமூகத்திற் பிறந்தவர்கள் கஷ்டமடையவேகூடாது, இதற்குமேல், மற்றவகுப்பார் நம்மிடம் மதிப்புச்செலுத்தும்படி நாம் நடந்துகொள்ளவேண்டும். தற்போது நாட்டுக்கோட்டையார் என்றால், "மிகப் பயந்தவர்கள்; அவர்கள் விஷயத்தில் எப்படிவேண்டுமானாலும் நடந்துகொள்ளலாம்" என்ற எண்ணம் பல வகுப்பினர் மனதிலும் பதிந்துகிடக்கிறது. இவ்வெண்ணம் மாற்றப்பட்டாலன்றி நமது சமூகத்தாரைப்பிறர் பொருட்படுத்தமாட்டார்கள். பம்பாய்மாகாணத்தில் பார்ஸிகளுக்கு எவ்வளவு செல்வாக்கும் மதிப்புமிருக்கிறதோ அதைவிடப் பன்மடங்கு மதிப்பும் செல்வாக்கும் சென்னை மாகாணத்தில் நமக்குக்கிடைக்கவேண்டும். ஆனால் "நம்மவர்வம்புவேண்டாம், ஒதுங்கியிருப்பது நல"மென்று பழையகாலத்தை நினைத்துக்கொண்டு சாந்தம் கொண்டாடுகிறபடியால் நம்மைப் பொருட்படுத்தி மதிப்புச் செலுத்த மற்றவர் சங்கோசப்படுகிறார்கள். காலநிலைமையையும்ஆட்சிமுறையையும் பொது ஜனங்களின் மனப்பான்மையையும்கருதி நாமும் கொஞ்சம் சுறுசுறுப்புக் காட்டவேண்டிய சந்தர்ப்பம் வந்திருக்கிறது. நாம் முன்னேறுவதைத் தடுப்பதற்கு நம்முன்னேயே சிலரைத்தயார் செய்திருக்கிறார்கள். அந்நியநாட்டில் பொருள் சம்பாதித்து இந்நாட்டில்போட்டவரியை ஏராளமாகக் கொடுத்து நிற்கிற நம்மவரை அரசாங்கத்தார் கூடச் சில சந்தர்ப்பங்களில் மதிக்கவில்லை. கேவலம் இந் நாட்டில் வாழுகிற சிறு உத்யோகஸ்தர்களில் பெரும்பாலார் நம்மவரைக் கண்டால் ஏளனம் செய்கிறார்கள். நமது வரிப்பணத்தில் காலக்ஷேபம் செய்கிற நமது ஊழியர்கள் தங்களை "யஜமான்" என்று சொல்லவேண்டுமென்று விரும்புகிறார்கள். அபராதம் விதிக்கும்போது-வாய்ப்பேச்சுப் பேசும்போது கூட நம்மவரிடம் அலக்ஷியமாக நடந்து கொள்ளுகிறார்களென்று கூறப்படுகிறது. இந்த மாதிரி நமதுசமூகத்திற்கு அவமானமுண்டாகிற சாலங்களில் அதற்குக் காரணங்களா யிருப்பவரைப் பற்றி நாம் கவனியாதிருத்தல் கூடாது. அவற்றுக்குத் தக்க பரிகாரங்களை நாம் தேடவேண்டும். இந்த இடங்களில்தான் நாம் ஜாத்யபிமானத்தையும் நியாயப்பற்றையும் தைரியத்தையும் தியாகத்தையும் வெளியே காட்டவேண்டும். நம்மவரிடம் பொதுவாகப் பயம்மிகுந்திருக்கிறது. உத்யோகஸ்தர்களுடைய அதிகாரத்தை நன்றாக உணர்ந்திருந்தால்இந்த பயம் ஒருவாறு நீங்கும். தியாக புத்தியிருந்தால் மற்றொரு பாகமும் நீங்கிப் போய்விடும். ஆனால் நம்மவர் மிகுதியும் பயப்பட இன்னும் ஒரு காரணமிருக்கிறது. அதாவது கைதியானவர்களைக் சேர்க்கிறதில்லையென்பது. இந்த வழக்கம் முற்காலத்தில் நியாயமானதே யாகும். இந்தக் காலத்தில், நியாயமாகக் குற்றம் செய்தவன்தான் தண்டிக்கப்படுகிறான் என்று நம்மால் திட்டமாகச் சொல்லிவிட முடியவில்லை. சில சந்தர்ப்பங்களில் துவேஷங் காரணமாகக்கூடக் கைதிசெய்விட நேரலாம். நியாயமாகவோ அநியாயமாகவோ கைதுசெய்யப்பட்டால் அவனைநீக்கிவிடுவதென்பது சரியான விஷயமன்று. குற்றஞ்செய்தவனை நாம் நீக்கிவிடலாம். ஆனால் குற்றம் புரியாதவனையும் கைது செய்ததற்காக நீக்கிவிடுவது தர்மமல்ல. இவ்விஷயம் நன்கு யோஜித்துக்கட்டாயம் விமோசனம் செய்யப்படவேண்டும். அப்படிச்செய்வதால் அநாவசியமாகப் பயப்படவேண்டிய அவசியமிராது.

தொழில் விஷயமாக-வட்டித்தொழில்செய்வது வைசியதருமமே யாயினும், நமதுதேசத்தில் வியாபாரப் பொருட்கள் மிகுந்து தேசநலத்தைப்பலரும்நாடிமிங்காலத்தில் வியாபாரத்துறையில் நம்மவர் விரைவாகக் கலந்து கொள்ளவேண்டும். வட்டித் தொழிலால் கோடீசுவரர்களாவது துர்லபம். எந்தக்காலத்திலும் எந்த தேசத்திலும் வியாபாரிகள்தாம் கோடீசுவரர்களாகி யிருக்கின்றனர். ஆனால் திடீரென்று தொழிலை மாற்றுவதால் பெருத்தகஷ்டங்கள் உண்டாகி விடுவதாலும், வியாபாரப்பழக்கம் எல்லாருக்கும் தற்போதின்மையாலும் கொஞ்சங்கொஞ்சமாக எவ்வளவு கூடுமோ அவ்வளவு விரைவாக வியாபாரத்தில் நாம் கலந்து கொள்ளவேண்டும். அப்பொழுது தான் பல துறையிலும் நாம் செல்வாக்குப் பெறமுடியும்.

நமது பெண்மக்களும் ஆடவர்களும் வெளியே செல்லும்போது மிகுந்த கௌரவமாகப் பிறர் மதிக்குமாறு நடந்து கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதற்கும் முயலவேண்டும். சில விஷயங்களை மிகச்சிறிதென்று அலக்ஷியப்படுத்துவதால் பெரிய அவமானங்கள் கூட நேர இடமுண்டு. மேலும், வெளிநாடுகட்குச் சென்று பல சமூகத்தினரையும் பார்த்து நமது ஆடவர்கள் பல வழியிலும் வளர்ச்சியடைந்திருக்கின்றனர். பெண்கள் மிகுதியும் படிப்பின்றி விசாலமான ஹிருதயமும் உலகஅநுபவமும் குறைந்து இருக்கிறபடியால் வாழ்க்கை முரண்படுகிறது. புருஷர்களைப் போலவே பல துறையிலும் நமது தொழிலுக்கும் செய்கைக்கும் சீர்திருத்தத்திற்கும் கலந்து அபிப்பிராயபேதமின்றி வாழ்வதற்குரிய முயற்சிகள் செய்யப்பெறவேண்டும். (தொடரும்.)

